بسم الله الرحمن الرحيم

# الفقه الميسر

في ضوء الكتاب والسنة

تأليف نبذة من العلماء حفظهم الله

5ம் பாகம்

குர்ஆன், சுன்னா ஒளியில்

# இலகுவான மார்க்க சட்டம்

## كتاب الحج

## ஹஜ்

அரபியில் :
அறிஞர்களின் குழு

தமிழில் :
குர்ஆன், சுன்னா பணியாளர்
உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்

DARUL HUDA

# KITAB ALHAJ - AL FIQHUL MUYASSAR

ABOUT THIS BOOK

| | |
|---|---|
| Author | : GROUP OF SCHOLARS |
| Translator | : Omar Sheriff Ibnu Abdus Salam |
| Proof Readers | : Alim O.M. Kaja Mohaideen Rabbani<br>Alim A. Mohamed Mydeen Baqavi<br>Alim A. Abdul Qadir Rabbani |
| Designers | : Z. Abdul Bari Sadaqi, Mohamed Anas |
| Language | : Tamil |
| Edition | : 1st (August 2019) |
| Copies | : 3000 |
| Total Pages | : 96 |
| **Price** | **: Rs. 100/-** |
| Printed by | : Patel Graphics, Chennai - 06. |
| Reference No. | : DH-TML 2059 |

Published by:

DARUL HUDA

Quality Islamic Book Publishers

# 211 (102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai 600001.

Phone : +91 44 25247866, | darulhuda.chennai@gmail.com
Mobile : +91 98401 74121 | www.darulhuda.net

# பதிப்புரை

**الحمد لله والصلاة والسلام على رسول الله وعلى آله وصحبه أجمعين**

அல்லாஹ்வின் அருளால், அல்ஃபிக்ஹுல் முயஸ்ஸர் என்ற பெயரில் திறமை வாய்ந்த மார்க்க அறிஞர்கள் குர்ஆன் மற்றும் ஸுன்னாவின் அடிப்படையில் தொகுத்த கிரந்தத்திலிருந்து **1. தூய்மை 2. தொழுகை 3. ஸகாத் 4. நோன்பு** ஆகிய அத்தியாயங்கள் வெளியிட்டதைத் தொடர்ந்து **ஹஜ்** உடைய சட்டங்கள் நிறைந்த இந்த ஐந்தாவது அத்தியாயத்தை வெளியிடுகின்றோம்.

மார்க்க கல்வி கற்ற ஆலிம்களுக்கும் கல்வி கற்கின்ற மாணவர்களுக்கும் பொதுமக்களுக்கும் இந்நூல் இன் ஷா அல்லாஹ் பயனுள்ளதாக இருக்கும். இந்த அத்தியாயங்களைத் தொடர்ந்து முஆமலாத் (-பொருளாதாரம்) தொடர்பான அத்தியாயங்களும் விரைவில் வெளிவர இருக்கின்றன இன் ஷா அல்லாஹ்...

இந்நூலில் ஏதேனும் குறைகளை தாங்கள் கண்டால் எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். இன்ஷா அல்லாஹ்... அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுகிறோம்.

இந்நூல் வெளிவருவதற்கு உதவியாக இருந்த தாருல் ஹுதாவின் பணியாளர்கள் எல்லோருக்கும் இம்மை மறுமை நற்பாக்கியங்களை அல்லாஹ் தந்தருள்வானாக! ஆமீன்.

இந்நூலை அல்லாஹ் அங்கீகரித்து மக்களெல்லாம் பயன்பெறும்படி செய்வானாக! ஆமீன். தொடர்ந்து பயன்தருகின்ற நல்ல நூல்களை வெளியிடுவதற்கு அல்லாஹ் உதவி செய்வானாக!

மார்க்க பணியாளன்
*உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்*
தாருல் ஹுதா, சென்னை 600001.

## பாடங்கள்

# தாருல் ஹுதா
## ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்!

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும்

வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர்களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள் புரிவான். நிச்சயமாக, அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்."

(அத்தவ்பா 9:71)

(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை) சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும்படி ஏவி பாவமான

காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும். இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள். (ஆலுஇம்ரான் 3:104)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தமது கரத்தால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும் அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன. (ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியவர் முதல் பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவை உள்ளவர்களாக இருப்பதை பார்க்கிறோம். ஆகவே மேற்கூறப்பட்ட இறை வசனங்கள் மற்றும் நபி மொழிக்கு இணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து அல்குர்ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் 'தாருல் ஹுதா'.

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத் தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதி இறைத்தூதர் முஹம்மது ﷺ அவர்களுக்கு பின் அவர்களுடைய சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும் சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை

வலியுறுத்துகின்றன. எனவே இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் தாருல் ஹுதாவின் முதல் பணியாகும்.

**கற்பித்தல்:**

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள் வாலிபர்கள் முதியவர்கள் ஆண்கள் பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத்தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது பணியாகும்.

**நூல் வெளியிடுதல்:**

மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழி இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹு தஆலாவே அனைவரின் துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை எளியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கு பெறுவதும் பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவதும் முஸ்லிம்களுடைய அடிப்படை பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக “பைத்துல்மால்” (பொது நிதி) ஏற்பாடு செய்து இரக்க சிந்தையும் மார்க்கப் பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான உபரியான தர்மங்களை பெற்று

அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி இஸ்லாம் முழுமை யாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காக மனித சமுதாயம் நல்லுறவும் அன்பும் கருணையும் சமூகப் புரிந்துணர்வு ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்றவரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.

//////////////




நீங்கள் ஹஜ்ஜையும் உம்ராவையும்
அல்லாஹ்வுக்காக முழுமையாக்குங்கள்.

(அல்குர்ஆன் 2:196)

முதல் பாடம்

# الحج – ஹஜ்

இந்த அத்தியாயத்தில் பல பாடங்கள் உள்ளன.

## ஹஜ் தொடர்பாக அறிந்துகொள்ள வேண்டிய முக்கிய கருத்துக்கள்

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

### ஹஜ் என்றால் என்ன?

அரபி மொழியில் ஹஜ் என்றால் நாடுதல் என்று பொருள் ஆகும். மார்க்கத்தில் ஹஜ் என்றால் நபி ﷺ அவர்கள் கூறிய முறைப்படி குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் அல்லாஹ்வை வணங்குகின்றேன் என்ற எண்ணத்தில் சில கிரியைகளை நிறைவேற்றுவதாகும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

### ஹஜ்ஜுடைய சட்டமும் அதன் சிறப்பும்

ஹஜ், இஸ்லாமிய மார்க்கத்தின் தூண்கள் மற்றும் அதன் மிக கட்டாயக் கடமைகளில் ஒன்றாகும்.

وَلِلَّهِ عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا وَمَنْ كَفَرَ فَإِنَّ اللَّهَ غَنِيٌّ عَنِ الْعَالَمِينَ

அல்லாஹ்வுக்காக (அந்த) இல்லத்தை ஹஜ் செய்வது அதன் பக்கம் பாதையால் சக்தி பெற்ற மக்கள் மீது கடமையாகும். எவர்

நிராகரிப்பாரோ, நிச்சயமாக அல்லாஹ் அகிலத்தார்களை விட்டும் தேவையற்றவன். (அல்குர்ஆன் 3:97)

وَأَتِمُّوا الْحَجَّ وَالْعُمْرَةَ لِلَّهِ

நீங்கள் ஹஜ்ஜையும் உம்ராவையும் அல்லாஹ்வுக்காக முழுமையாக்குங்கள். (அல்குர்ஆன் 2:196)

عَنِ ابْنِ عُمَرَ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ شَهَادَةِ أَنْ لَا إِلَهَ إِلَّا اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ وَإِقَامِ الصَّلَاةِ وَإِيتَاءِ الزَّكَاةِ وَالْحَجِّ وَصَوْمِ رَمَضَانَ رواه البخاري برقم ٧

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: இஸ்லாம் ஐந்தின் மீது அமைக்கப்பட்டுள்ளது. 1). நிச்சயமாக வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் அறவே இல்லை. மேலும் நிச்சயமாக முஹம்மது அவர்கள் அல்லாஹ்வுடைய தூதர் ஆவார்கள் என்று சாட்சி கூறுவது. 2). தொழுகையை நிலைநிறுத்துவது. 3). ஸகாத் கொடுப்பது. 4). ஹஜ் செய்வது. 5). ரமழான் மாதத்தில் நோன்பு நோற்பது.[1]

ஹஜ்ஜுக்கு செல்வதற்கு யார் வசதியும் சக்தியும் பெற்றுள்ளாரோ அவர் வாழ்நாளில் ஒருமுறை கண்டிப்பாக ஹஜ் செய்ய வேண்டும். அது அவர் மீது ஃபர்ழ் ஆகும்.

### ஹஜ்ஜுடைய சிறப்புகள்

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ الْعُمْرَةُ إِلَى الْعُمْرَةِ كَفَّارَةٌ لِمَا بَيْنَهُمَا وَالْحَجُّ الْمَبْرُورُ لَيْسَ لَهُ جَزَاءٌ إِلَّا الْجَنَّةُ رواه البخاري برقم ١٦٥٠

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: முதல் உம்ராவிலிருந்து

1. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: புகாரி, எண்: 7

இரண்டாவது உம்ரா வரை உள்ள பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடுகின்றன. நன்மையான ஹஜ்ஜுக்கு சொர்க்கத்தைத் தவிர வேறு கூலி இல்லை.[2]

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ مَنْ حَجَّ لِلّٰهِ فَلَمْ يَرْفُثْ وَلَمْ يَفْسُقْ رَجَعَ كَيَوْمِ وَلَدَتْهُ أُمُّهُ رواه البخاري برقم ١٤٢٤

நபி ﷺ அவர்கள் கூற நான் செவியுற்றேன்: யார் ஹஜ் செய்து அதில், ஆபாசமாக பேசவில்லையோ, பாவம் செய்யவில்லையோ அவர் அவருடைய தாய் அவரை பெற்றெடுத்த நாளில் இருந்தது போன்று (பாவம் அற்றவராக தனது இல்லம்) திரும்புவார்.[3]

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## வாழ்க்கையில் ஒரு முறைக்கு மேல் ஹஜ் செய்வது கடமையா?

ஹஜ் வாழ்க்கையில் ஒருமுறைதான் கடமை ஆகும். ஒருமுறைக்கு மேல் ஹஜ் செய்வது கடமையாகாது. ஒருமுறைக்கு மேல் ஹஜ் செய்வது நஃபில் -உபரியாக இருக்கும்.

ஆதாரம்:

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ خَطَبَنَا رَسُولُ اللّٰهِ ﷺ فَقَالَ أَيُّهَا النَّاسُ قَدْ فَرَضَ اللّٰهُ عَلَيْكُمُ الْحَجَّ فَحُجُّوا فَقَالَ رَجُلٌ أَكُلَّ عَامٍ يَا رَسُولَ اللّٰهِ فَسَكَتَ حَتّٰى قَالَهَا ثَلَاثًا فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ لَوْ قُلْتُ نَعَمْ لَوَجَبَتْ وَلَمَا اسْتَطَعْتُمْ ثُمَّ قَالَ ذَرُونِي مَا تَرَكْتُكُمْ فَإِنَّمَا هَلَكَ مَنْ

2. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 1650

3. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 1424

كَانَ قَبْلَكُمْ بِكَثْرَةِ سُؤَالِهِمْ وَاخْتِلَافِهِمْ عَلَى أَنْبِيَائِهِمْ فَإِذَا أَمَرْتُكُمْ بِشَيْءٍ فَأْتُوا مِنْهُ مَا اسْتَطَعْتُمْ وَإِذَا نَهَيْتُكُمْ عَنْ شَيْءٍ فَدَعُوهُ رواه البخاري برقم ٢٣٨٠

அல்லாஹ்வுடைய தூதர் ﷺ அவர்கள் எங்களுக்கு பிரசங்கம் நிகழ்தினார்கள். அப்போது கூறினார்கள்: "மக்களே! ஹஜ் செய்வதை அல்லாஹ் உங்கள் மீது கட்டாயக் கடமையாக ஆக்கியிருக்கின்றான். ஆகவே, நீங்கள் ஹஜ் செய்யுங்கள். ஒருவர் கேட்டார்: "அல்லாஹ்வுடைய தூதரே! ஒவ்வொரு ஆண்டுமா? நபி ﷺ அவர்கள் அமைதியாக இருந்தார்கள். அவர் மூன்று முறை அதே வார்த்தையை திரும்பத் திரும்பக் கேட்டார். அதற்கு, ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "நான் ஆம் என்று கூறியிருந்தால், அது (உங்கள் மீது) கடமையாகியிருக்கும். ஆனால், நீங்கள் (அதைச் செய்ய) சக்தி பெற்றிருக்க மாட்டீர்கள். ஆகவே, நான் உங்களை விட்டதுடன் என்னையும் நீங்கள் விட்டுவிடுங்கள். உங்களுக்கு முன்னுள்ளவர்கள் அழிந்த தெல்லாம் அவர்கள் தங்களது நபிமார்களிடத்தில் அதிகமாக கேள்வி கேட்டதாலும் கருத்து வேற்றுமை கொண்டதாலும்தான். ஆகவே, நான் உங்களுக்கு ஒரு கட்டளையைக் கொடுத்தால் உங்களால் முடிந்த அளவு அதை நிறைவேற்றுங்கள். நான் உங்களை ஒரு காரியத்தை விட்டு தடுத்து விட்டால் அதை நீங்கள் விட்டுவிடுங்கள்![4]

நபி ﷺ அவர் மக்காவிலிருந்து மதீனா வந்த பின்னர் ஒருமுறைதான் ஹஜ் செய்தார்கள். ஹஜ் செய்ய சக்தி பெற்றவர் மீது ஹஜ் வாழ்நாளில் ஒருமுறைதான் கடமை என்பதில் எல்லா அறிஞர்களும் ஒரே கருத்தில் இருக்கின்றனர்.

ஆகவே, மார்க்கம் கூறிய நிபந்தனைகளின்படி ஒருவர் மீது ஹஜ் கடமையாகிவிட்டால் அவர் ஹஜ்ஜை நிறைவேற்றுவதில் தீவிரம்

4. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﷺ, நூல்: புகாரி, எண்: 2380

காட்ட வேண்டும். ஹஜ் செய்வதை தகுந்த காரணம் இல்லாமல் தாமதப்படுத்துவது பெரும் பாவமாகும்.

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ تَعَجَّلُوا إِلَى الْحَجِّ يَعْنِي الْفَرِيضَةَ فَإِنَّ أَحَدَكُمْ لَا يَدْرِي مَا يَعْرِضُ لَهُ رواه أحمد برقم ٢٧٢١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: கடமையான ஹஜ்ஜை நிறைவேற்றுவதில் நீங்கள் தீவிரம் காட்டுங்கள்! ஏனெனில், உங்களில் ஒருவர் தனக்கு என்ன (பிரச்சினை) குறிக்கிடும் என்பதை அறிய மாட்டார்.[5]

இந்த நபிமொழி நபி ﷺ அவர்கள் கூறியதாகவும் அல்லது இப்னு அப்பாஸ் ﵄ அவர்கள் கூறியதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த அறிவிப்புகளில் ஒன்று மற்றொன்றை பலப்படுத்துகின்றது.

**நான்காவது சட்டவிளக்கம்**

## ஹஜ்ஜுடைய நிபந்தனைகள்

ஒருவர் மீது ஹஜ் கடமை ஆகுவதற்கு ஐந்து நிபந்தனைகள் இருக்க வேண்டும்.

### 1). முஸ்லிமாக இருக்க வேண்டும்.

“காஃபிர்” இறை மறுப்பாளராக இருப்பவர் மீது ஹஜ் கடமை ஆகாது. அவர் நிறைவேற்றினால் அது சரியான ஹஜ்ஜாக ஆகாது. ஏனெனில், இஸ்லாமிய வணக்க வழிபாடுகள் சரியாக நிறைவேறுவதற்கு அவற்றை செய்பவர் முஸ்லிமாக இருக்க வேண்டும் என்பது அடிப்படை நிபந்தனை ஆகும்.

### 2). அறிவு, அதாவது புத்தி சுவாதீனமுள்ளவராக இருக்கவேண்டும்.

பைத்தியக்காரர் மீது ஹஜ் கடமை இல்லை. ஒருவர் பைத்தியமாக

5. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: அஹ்மது, எண்: 2721

இருக்கின்ற நிலையில் அவர் செய்கின்ற ஹஜ் சரியாகாது. ஏனெனில், மார்க்க கடமைகளை நிறைவேற்ற புத்தி சுவாதீனம் இருப்பது நிபந்தனை ஆகும். இன்னும் பைத்தியக்காரர் மார்க்க இபாதத்துகளை நிறைவேற்ற தகுதியுடையவர்களில் உள்ளவர் இல்லை. மேலும் அவருக்கு புத்தி சுவாதீனம் ஏற்படுகின்றவரை அவர் மன்னிக்கப்பட்டவர் ஆவார். இபாதத்துகளை செய்வதும் அவர் மீது கடமை இல்லை. இபாதத்துகளை விடுவதும் அவர் மீது குற்றமில்லை.

عَنْ عَلِيٍّ ﵁ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ رُفِعَ الْقَلَمُ عَنْ ثَلَاثَةٍ عَنِ الْمَجْنُونِ الْمَغْلُوبِ عَلَى عَقْلِهِ حَتَّى يُفِيقَ وَعَنِ النَّائِمِ حَتَّى يَسْتَيْقِظَ وَعَنِ الصَّبِيِّ حَتَّى يَحْتَلِمَ رَوَاهُ أَبُو دَاوُدَ بِرَقْمِ ٣٨٢٣

நபி ﷺ கூறினார்கள்: மூன்று நபர்களை விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டு விட்டது. தனது அறிவை இழந்த பைத்தியக்காரர் அவர் தெளிவடைகின்றவரை, தூங்குபவர் அவர் விழிக்கின்றவரை, குழந்தை அது பருவ வயதை அடைகின்றவரை. இவர்கள் அனைவரையும் விட்டும் சட்டம் உயர்த்தப்பட்டுவிட்டது (அகற்றப்பட்டு விட்டது).[6]

### 3). பருவ வயதை அடைந்திருக்க வேண்டும்.

சிறுவர்கள் மீது ஹஜ் கடமை இல்லை. அவர்கள் பருவ வயதை அடைகின்ற வரை மன்னிக்கப்பட்டவர்கள் ஆவார்கள். ஆனால், சிறுவர்கள் ஹஜ் செய்தால் அவர்களின் ஹஜ் சரியானதாக ஆகிவிடும். தம்யீஸ் -பிரித்தறிகின்ற பக்குவமுள்ளவர்களாக இருந்தால் அந்த சிறுவர்களே ஹஜ்ஜுடைய நிய்யத் வைப்பார்கள். அப்படி இல்லையென்றால் அந்த சிறுவர்களின் பொறுப்பாளர் அந்த சிறுவருக்குரிய நிய்யத் வைப்பார்.

ஒருவர் சிறுவயதில் ஹஜ் செய்துவிட்டால் அது கடமையான ஹஜ்ஜாக நிறைவேறாது. ஆகவே, அவர் பருவமடைந்த பின்னர்,

6. அறிவிப்பாளர்: அலீ ﵁, நூல்: சுனன் அபூதாவூத், எண்: 3823.

ஹஜ் செய்வதற்கு உடலாலும் பொருளாலும் சக்தி பெற்றால் அவர் தன் மீது ஃபர்ழாகிவிட்ட ஹஜ்ஜை நிறைவேற்ற வேண்டும். சிறுவயதில் செய்த ஹஜ் அவருக்கு போதுமாகாது. இதில் அறிஞர்களுக்கு மத்தியில் மாறுபட்ட கருத்துக்கள் இல்லை.

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﷺ قَالَ رَفَعَتْ امْرَأَةٌ صَبِيًّا لَهَا فَقَالَتْ يَا رَسُولَ اللّٰهِ أَلِهٰذَا حَجٌّ قَالَ نَعَمْ وَلَكِ أَجْرٌ رواه مسلم برقم ٢٣٧٨**

இப்னு அப்பாஸ் ﷺ கூறுகிறார்கள்: ஒரு பெண் தனது குழந்தையை உயர்த்திக் காண்பித்து அல்லாஹ்வின் தூதரே இந்த குழந்தைக்கு ஹஜ் சேருமா என்று கேட்டார். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஆம், (சேரும்). உமக்கும் கூலி கிடைக்கும்.[7]

**கருத்து:** இந்த நபிமொழி குழந்தைகள் அவர்கள் எந்த வயதில் இருந்தாலும் அவர்கள் செய்கின்ற ஹஜ்ஜு ஹஜ்ஜாக நிறைவேறும். அந்த குழந்தைகளை ஹஜ் செய்ய வைக்கின்றவர்களுக்கும் ஹஜ்ஜுடைய கூலி கிடைக்கும் என்பதை உணர்த்துகின்றது.

**عَنِ ابْنِ عَبَّاسٍ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ أَيُّمَا صَبِيٍّ حَجَّ ثُمَّ بَلَغَ الْحِنْثَ فَعَلَيْهِ أَنْ يَحُجَّ حَجَّةً أُخْرَى وَأَيُّمَا أَعْرَابِيٍّ حَجَّ ثُمَّ هَاجَرَ فَعَلَيْهِ أَنْ يَحُجَّ حَجَّةً أُخْرَى وَأَيُّمَا عَبْدٍ حَجَّ ثُمَّ أُعْتِقَ فَعَلَيْهِ حَجَّةٌ أُخْرَى**

**رواه البيهقي في السنن الصغير برقم ١٤٧٩**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: எந்த ஒரு சிறுவர் ஹஜ் செய்வாரோ, பிறகு அவர் பருவ வயதை அடைந்துவிட்டால் அவர் மீது மற்றொரு ஹஜ் கடமையாக இருக்கும். (காஃபிர்களுடன் வாழ்கின்ற) எந்த ஒரு கிராமவாசி ஹஜ் செய்வாரோ, பிறகு அவர்

7. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: முஸ்லிம், எண்: 2378

ஹிஜ்ரா செய்து (முஸ்லிம்களுடன் சேர்ந்து) விட்டால் அவர் மீது மற்றொரு ஹஜ் கடமையாக இருக்கும். எந்த ஓர் அடிமை ஹஜ் செய்வாரோ, பிறகு அவர் உரிமையிடப்பட்டால் அவர் மீது மற்றொரு ஹஜ் கடமையாக இருக்கும்.[8]

**4). சுதந்திரமானவராக இருக்க வேண்டும்.**

யாருக்கும் அடிமையாக இருக்கக்கூடாது. அடிமையிடம் அவருக்கு சொந்தமான செல்வம் இருக்காது. ஹஜ் கடமையாவதற்கு சொந்தமான செல்வம் இருக்க வேண்டும் என்பது ஒரு நிபந்தனையாகும். அடிமை தனது எஜமானர் உடைய அனுமதி பெற்று ஹஜ் செய்தால் அந்த ஹஜ் சரியாகிவிடும். இல்லையென்றால் அந்த ஹஜ் சரியாகாது.

ஓர் அடிமை தான் அடிமையாக இருக்கும்போது எஜமானரின் அனுமதிபெற்று ஹஜ் செய்தாலும் அவர் உரிமையிடப்பட்ட பின்னர் ஹஜ் செய்ய வசதி பெற்றுவிட்டால் அவர் மீது ஹஜ் ஃபர்ழ் ஆகிவிடும். அவர் இந்த ஃபர்ழான ஹஜ்ஜை நிறைவேற்ற வேண்டும். தான் அடிமையாக இருந்தபோது செய்த ஹஜ்ஜு ஃபர்ழான ஹஜ்ஜுக்கு போதுமாகிவிடாது. இது தான் எல்லா அறிஞர்களின் கூற்றாகும்.

மேற்கூறப்பட்ட நபிமொழிதான் இதற்கு ஆதாரமாகும்.

**5). உடலாலும் பொருளாலும் வசதி பெற்றவராக இருக்கவேண்டும்.**

ஆதாரம்:

அல்லாஹ் கூறுகின்றான்:

**وَلِلَّهِ عَلَى النَّاسِ حِجُّ الْبَيْتِ مَنِ اسْتَطَاعَ إِلَيْهِ سَبِيلًا وَمَنْ كَفَرَ فَإِنَّ اللَّهَ غَنِيٌّ عَنِ الْعَالَمِينَ**

அல்லாஹ்வுக்காக (அந்த) இல்லத்தை ஹஜ் செய்வது அதன் பக்கம் பாதையால் சக்தி பெற்ற மக்கள் மீது கடமையாகும். எவர்

8. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: சுனன் சகீர் - பைஹகி, எண்: 1479

நிராகரிப்பாரோ, நிச்சயமாக அல்லாஹ் அகிலத்தார்களை விட்டும் தேவையற்றவன். (அல்குர்ஆன் 3:97)

மக்கா சென்று திரும்பி வருகின்ற காலத்திற்கு தேவையான அளவு செல்வம் ஒருவரிடம் இல்லையென்றால் அல்லது வாகன வசதி இல்லையென்றால் அவர் மீது ஹஜ் கடமையாகாது.

“தேவையான செல்வம்” என்பது தனக்கும் தனது பராமரிப்பில் உள்ளவர்களுக்கும் உள்ள அடிப்படை தேவைகளை நிறைவேற்றும் அளவிற்குள்ள செல்வத்தை குறிக்கும்.

மேலும், ஒருவருக்கு உடல் ஒத்துழைக்கவில்லை என்றால் உதாரணமாக, வயது முதிர்ந்தவராக அல்லது நோயாளியாக இருந்து, பயணம் செய்ய முடியாத அளவு பலவீனமானவராக இருந்தால் அவர் மீது ஹஜ் கடமை இல்லை.

மேலும், ஹஜ்ஜுக்கு செல்கின்ற பயணம் பாதுகாப்பற்றதாக ஆகிவிட்டால், உதாரணமாக வழியில் கொள்ளையர்கள் இருந்தால் அல்லது கொடிய நோய் பரவி இருந்தால் அல்லது தனது உடலுக்கோ அல்லது உயிருக்கோ ஏதும் ஆபத்தை உணர்ந்தால் இந்த காரணங்கள் நீங்கி, ஹஜ்ஜுக்கு செல்ல அவர் ஆற்றல் பெறுகின்ற வரை அவர் மீது ஹஜ் கடமையாகாது.

அல்லாஹ் கூறுகின்றான்:

لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا

அல்லாஹ் ஓர் ஆன்மாவை அதன் வசதிக்கு மேல் (சக்திக்கு மேல் கட்டளையிட்டு) சிரமப்படுத்த மாட்டான். (அல்குர்ஆன் 2:286)

**கருத்து:** இந்த வசனத்தில் வுஸ்ஃ -வசதி என்று அல்லாஹ் கூறி இருக்கின்றான். ஒருவர் ஓர் அமலை செய்வதற்கு ஆற்றல் பெற்றிருப்பதும் வசதி என்ற வரையறைக்குள் அடங்கும்.

பெண்களைப் பொறுத்தவரை அவர்கள் மீது ஹஜ் கடமையாக வேண்டுமென்றால் பயணத்தில் அவர்களுடன் செல்வதற்கு கணவரோ அல்லது மஹ்ரம் -திருமணம் செய்வது நிரந்தரமாக தடையான உறவினரோ இருக்க வேண்டும். அப்படி இல்லாமல் பெண்கள் தனியாக செல்வது கூடாது.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ النَّبِيُّ ﷺ لَا يَحِلُّ لِامْرَأَةٍ تُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ أَنْ تُسَافِرَ مَسِيرَةَ يَوْمٍ وَلَيْلَةٍ لَيْسَ مَعَهَا حُرْمَةٌ رواه البخاري برقم ١٠٢٦**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொள்கின்ற பெண் தன்னுடன் இரத்த உறவினர் இல்லாமல் ஒரு பகல், ஒரு இரவு நடை தூரம் பயணிப்பது கூடாது.[9]

**عَنِ ابْنِ عُمَرَ ﵄ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا تُسَافِرْ الْمَرْأَةُ ثَلَاثًا إِلَّا مَعَ ذِي مَحْرَمٍ رواه البخاري برقم ١٠٢٥**

பெண்கள் இரத்த உறவினர் இல்லாமல் மூன்று நாள் தூரம் பயணிக்கக் கூடாது என்று நபி ﷺ அவர்கள் கூறினார்கள்.[10]

**عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللَّهِ ﷺ لَا يَحِلُّ لِامْرَأَةٍ تُؤْمِنُ بِاللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ أَنْ تُسَافِرَ سَفَرًا يَكُونُ ثَلَاثَةَ أَيَّامٍ فَصَاعِدًا إِلَّا وَمَعَهَا أَبُوهَا أَوْ ابْنُهَا أَوْ زَوْجُهَا أَوْ أَخُوهَا أَوْ ذُو مَحْرَمٍ مِنْهَا رواه مسلم برقم ٢٣٩٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்டுள்ள பெண் மூன்று நாள் அல்லது அதைவிட அதிகமான நாள் தூரம் உள்ள பயணத்தை தன்னுடன் தனது தந்தை, அல்லது தனது மகன், அல்லது தனது

9. அறிவிப்பாளர்: அபூஹுரைரா ﵁, நூல்: புகாரி, எண்: 1026
10. அறிவிப்பாளர்: இப்னு உமர் ﵄, நூல்: புகாரி, எண்: 1025

கணவன், அல்லது தனது சகோதரன், அல்லது தனது இரத்த உறவினர் இல்லாமல் மேற்கொள்ளக் கூடாது. (பயணம் செய்யக் கூடாது).[11]

عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ قَالَ سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَخْطُبُ يَقُولُ لَا يَخْلُوَنَّ رَجُلٌ بِامْرَأَةٍ إِلَّا وَمَعَهَا ذُو مَحْرَمٍ وَلَا تُسَافِرْ الْمَرْأَةُ إِلَّا مَعَ ذِي مَحْرَمٍ فَقَامَ رَجُلٌ فَقَالَ يَا رَسُولَ اللهِ إِنَّ امْرَأَتِي خَرَجَتْ حَاجَّةً وَإِنِّي اكْتُتِبْتُ فِي غَزْوَةِ كَذَا وَكَذَا قَالَ انْطَلِقْ فَحُجَّ مَعَ امْرَأَتِكَ رواه مسلم برقم ٢٣٩١

நபி ﷺ அவர்கள் பிரசங்கம் செய்யும்போது தான் செவியுற்றதாக இப்னு அப்பாஸ் ﵄ அறிவிக்கின்றார்கள்: ஒரு பெண்ணுடன் அவளுடைய இரத்த உறவினர் இல்லாமல் எந்த ஆடவரும் தனித்திருக்க வேண்டாம். இரத்த உறவினர் இல்லாமல் பெண்கள் பயணம் செய்ய வேண்டாம். இதைக் கேட்டவுடன் ஒரு மனிதர் எழுந்து அல்லாஹ்வின் தூதரே! எனது மனைவி ஹஜ்ஜுக்கு புறப்பட்டுவிட்டாள். நான் இன்னென்ன போரில் செல்ல வேண்டும் என்று பெயர் எழுதப்பட்டுள்ளேன் என்றார். அதற்கு நபி ﷺ அவர்கள், நீ புறப்படு, உனது மனைவியுடன் ஹஜ்ஜுக்கு செல்! என்று கூறினார்கள்.[12]

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## உம்ரா உடைய சட்டமும் அதன் ஆதாரமும்

வாழ்நாளில் ஒருமுறை உம்ரா செய்வது “வாஜிப்” கட்டாயமாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَأَتِمُّوا الْحَجَّ وَالْعُمْرَةَ لِلّٰهِ

11. அறிவிப்பாளர்: அபூசயீது அல்குத்ரி ﵁, நூல்: முஸ்லிம், எண்: 2390
12. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: முஸ்லிம், எண்: 2391

நீங்கள் ஹஜ்ஜையும் உம்ராவையும் அல்லாஹ்வுக்காக முழுமையாக்குங்கள். (அல்குர்ஆன் 2:196)

عَنْ عَائِشَةَ ﵂ قَالَتْ قُلْتُ يَا رَسُولَ اللّٰهِ عَلَى النِّسَاءِ جِهَادٌ قَالَ نَعَمْ عَلَيْهِنَّ جِهَادٌ لَا قِتَالَ فِيهِ الْحَجُّ وَالْعُمْرَةُ رواه ابن ماجة برقم ٢٨٩٢

ஆயிஷா ﵂ அவர்கள் கூறுகிறார்கள்: அல்லாஹ்வின் தூதரே! பெண்கள் மீது ஜிஹாது கடமையா? என்று நான் கேட்டேன். நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஆம். சண்டையில்லாத ஜிஹாது அவர்கள் மீது கடமைதான். அதுதான் ஹஜ் இன்னும் உம்ரா ஆகும்.[13]

عَنْ أَبِي رَزِينٍ الْعُقَيْلِيِّ ﵁ أَنَّهُ أَتَى النَّبِيَّ ﷺ فَقَالَ يَا رَسُولَ اللّٰهِ إِنَّ أَبِي شَيْخٌ كَبِيرٌ لَا يَسْتَطِيعُ الْحَجَّ وَلَا الْعُمْرَةَ وَلَا الظَّعْنَ قَالَ حُجَّ عَنْ أَبِيكَ وَاعْتَمِرْ رواه الترمذي برقم ٨٥٢

அபூ ரசீன் அல் உகைலி ﵁ நபி ﷺ அவர்களிடம் வந்தார். மேலும் கூறுகிறார்: அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக எனது தந்தை வயது முதிர்ந்த வயோதிகர் ஆவார். அவரால் ஹஜ் செய்யவும் உம்ரா செய்யவும் பயணிக்க இயலாது என்று அவர் கூறினார். அதற்கு, நபி ﷺ அவர்கள் உனது தந்தை சார்பாக நீ ஹஜ் செய்! நீ உம்ரா செய்! என்று கூறினார்கள்.[14]

**உம்ரா உடைய ருக்னுகள் மூன்றாகும்.**

1). இஹ்ராம், 2). தவாஃப், 3). ஸஃயி[15]

---

13. அறிவிப்பாளர்: ஆயிஷா ﵂, நூல்: இப்னு மாஜா, எண்: 2892
14. அறிவிப்பாளர்: அபூ ரசீன் ﵁, நூல்: திர்மிதி, எண்: 852
15. இது குறித்து விரிவான விளக்கம் இன் ஷா அல்லாஹ் பின்னால் கூறப்படும்.

**ஆறாவது சட்டவிளக்கம்**

## ஹஜ் மற்றும் உம்ரா உடைய மீக்காத்

மீக்காத் என்றால் அரபி மொழியில் நிர்ணயிக்கப்பட்ட எல்லை என்று பொருள் ஆகும். மார்க்கத்தில் மீக்காத் என்றால் ஹஜ் அல்லது உம்ராவை ஆரம்பிப்பதற்கு நிர்ணயம் செய்யப்பட்ட இடம் அல்லது காலம் ஆகும்.

### ஹஜ் மற்றும் உம்ராவிற்கு கால அடிப்படையிலான மீக்காத்

உம்ராவை ஆண்டுடைய எல்லா மாதங்களிலும் எல்லா நாள்களிலும் நிறைவேற்றலாம். ஆனால், ஹஜ்ஜை நிறைவேற்றுவதற்கு குறிப்பிட்ட மாதங்கள் உள்ளன. அந்த மாதங்களில்தான் ஹஜ்ஜை நிறைவேற்ற வேண்டும். அது அல்லாத மற்ற மாதத்தில் ஹஜ்ஜுடைய அமல்களை செய்வது சரியாகாது.

அல்லாஹ் கூறுகின்றான்:

اَلْحَجُّ أَشْهُرٌ مَعْلُومَاتٌ

ஹஜ்ஜு அறியப்பட்ட மாதங்களாகும். (அல்குர்ஆன் 2:197)

அந்த மாதங்கள் ஷவ்வால், துல் கஃதா, துல் ஹஜ் ஆகும்.

இடம் சார்ந்த மீக்காத் என்பது ஹஜ்ஜுக்கும் உம்ராவிற்கும் நபி ﷺ அவர்கள் நிர்ணயித்த எல்லைகளாகும். ஹஜ் அல்லது உம்ராவிற்காக வருகின்றவர்கள் இஹ்ராம் இன்றி அந்த இடங்களைத் தாண்டக்கூடாது.

அந்த இடங்களின் விவரங்கள் பின்வருமாறு:

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ وَقَّتَ رَسُولُ اللّٰهِ ﷺ لِأَهْلِ الْمَدِينَةِ ذَا الْحُلَيْفَةِ وَلِأَهْلِ الشَّأْمِ الْجُحْفَةَ وَلِأَهْلِ نَجْدٍ قَرْنَ الْمَنَازِلِ وَلِأَهْلِ الْيَمَنِ يَلَمْلَمَ فَهُنَّ

لَهُنَّ وَلِمَنْ أَتَى عَلَيْهِنَّ مِنْ غَيْرِ أَهْلِهِنَّ لِمَنْ كَانَ يُرِيدُ الْحَجَّ وَالْعُمْرَةَ فَمَنْ كَانَ دُونَهُنَّ فَمُهَلُّهُ مِنْ أَهْلِهِ وَكَذَاكَ حَتَّى أَهْلُ مَكَّةَ يُهِلُّونَ مِنْهَا رواه البخاري برقم ١٤٢٩

இப்னு அப்பாஸ் ﷺ கூறுகிறார்கள்: மதீனாவாசிகளுக்கு துல் ஹுலைஃபாவையும் ஷாம்வாசிகளுக்கு ஜுஹ்ஃபாவையும் நஜ்துவாசிகளுக்கு கர்னுல் மனாஸிலையும் ஏமன்வாசிகளுக்கு யலம்லமையும் (ஹஜ் மற்றும் உம்ராவிற்குரிய) மீக்காத்தாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் நிர்ணயித்தார்கள். இவை அந்த இடங்களில் உள்ளவர்களுக்கும் மற்றும் அந்த இடங்கள் அல்லாத இடங்களில் இருந்து அதன் வழியாக வருகின்றவர்களுக்கும் அதாவது ஹஜ், உம்ராவை நாடி வருபவர்களுக்கு மீக்காத் ஆகும். யார் (மக்காவிற்கும்) இந்த இடங்களுக்கும் மத்தியில் வசிக்கின்றார்களோ அவர்கள் இஹ்ராம் கட்டவேண்டிய இடம் அவர்கள் வசிக்கின்ற இடம்தான். அவ்வாறே மக்காவில் வசிப்பவர்கள் மக்காவிலிருந்தே இஹ்ராம் கட்டுவார்கள்.[16]

மீக்காத் வரைபடம்




16. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﷺ, நூல்: புகாரி, எண்: 1429

யார் இந்த மீக்காத்துகளை இஹ்ராம் இன்றி கடந்து விடுவாரோ அவர் மீண்டும் அந்த இடத்திற்கு வந்து இஹ்ராம் உடைய நிய்யத் வைக்க வேண்டும். அப்படி வர முடியவில்லை என்றால் அவர் ஃபித்யா - குற்றப் பரிகாரம் கொடுக்க வேண்டும். அதாவது மக்காவில் ஓர் ஆட்டை அறுத்து ஹரமில் உள்ள ஏழைகளுக்கு பகிர்ந்து கொடுக்க வேண்டும்.

யார் மக்காவிற்கும் மீக்காத்துக்கும் இடைப்பட்ட இடங்களில் வசிக்கின்றார்களோ அவர்கள் தங்கள் வீடுகளில் இருந்தே இஹ்ராம் நிய்யத் செய்ய வேண்டும். இது முன்சென்ற நபிமொழியில் கூறப்பட்டுள்ளது.

மற்றொரு நபிமொழியில் பின்வருமாறு வந்துள்ளது

وَمَنْ كَانَ دُونَ ذٰلِكَ فَمِنْ حَيْثُ أَنْشَأَ حَتّٰى أَهْلُ مَكَّةَ مِنْ مَكَّةَ

யார் இவற்றுக்கு இடையில் இருக்கின்றார்களோ அவர்கள் எங்கிருந்து புறப்படுகின்றார்களோ அங்கிருந்து இஹ்ராம் கட்ட வேண்டும். மக்கா வாசிகள் மக்காவிலிருந்தே இஹ்ராம் கட்டுவார்கள்.[17]

................................

17. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: புகாரி, எண்: 1427

இரண்டாவது பாடம்

# ஹஜ்ஜுடைய
# ருக்னுகள் மற்றும் வாஜிபுகள்

இந்த பாடத்தில் இரண்டு சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## ஹஜ்ஜுடைய ருக்னுகள்

ஹஜ்ஜுடைய ருக்னுகள் நான்காகும். அவை;

### 1). இஹ்ராம்

இஹ்ராம் என்றால் ஹஜ் செய்வதாக மனதில் உறுதியாக எண்ணம் வைப்பதாகும். ஹஜ் என்பதும் ஒரு பரிசுத்தமான கலப்பற்ற இறை வழிபாடாகும். ஆகவே, இந்த உறுதியான நிய்யத் இல்லாமல் அது சரியாகாது என்பதுதான் முஸ்லிம் அறிஞர்கள் அனைவரின் முடிவாகும்.

**عَنْ عُمَرَ بْنِ الْخَطَّابِ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُولِهِ فَهِجْرَتُهُ إِلَى اللهِ وَرَسُولِهِ وَمَنْ كَانَتْ هِجْرَتُهُ لِدُنْيَا يُصِيبُهَا أَوْ امْرَأَةٍ يَتَزَوَّجُهَا فَهِجْرَتُهُ إِلَى مَا هَاجَرَ إِلَيْهِ رَوَاهُ الْبُخَارِيُّ بِرَقْمِ ١**

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: அமல்கள் எல்லாம் எண்ணங்களைக் கொண்டுதான் (நிறைவேறும்). ஒவ்வொரு மனிதனுக்கும் அவர் எண்ணியதுதான் கிடைக்கும். யாருடைய ஹிஜ்ரத் அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய ரசூலின் பக்கமும் இருக்குமோ அவருடைய ஹிஜ்ரத் அல்லாஹ்வின் பக்கமும் அவனுடைய தூதரின் பக்கமும் இருக்கும். யாருடைய ஹிஜ்ரத் அவர் அடையவிரும்புகின்ற

உலகத்திற்காக இருக்குமோ, அல்லது, தான் மணக்க விரும்புகின்ற பெண்ணுக்காக இருக்குமோ அவருடைய ஹிஜ்ரத் அவர் எதன் பக்கம் ஹிஜ்ரத் செய்தாரோ அதன் பக்கம்தான் இருக்கும்.[18]

நிய்யத் என்பது மனதில் இருக்க வேண்டிய ஒன்றாகும். ஆனால், ஹஜ்ஜில் மட்டும் அந்த நிய்யத்தை வாயினாலும் உச்சரிக்க வேண்டும். ஹஜ்ஜுடைய வகைகளில் எந்த வகையை செய்கிறேன் என்று குறிப்பிட்டு அந்த நிய்யத்தை உச்சரிக்க வேண்டும். நபி ﷺ அவர்கள் இப்படித்தான் நிய்யத் செய்தார்கள்.

### 2). அரஃபாவில் தங்குவது



இதுவும் ஹஜ்ஜுடைய ருக்னுதான் என்பது ஏகோபித்த முடிவாகும்.

ஆதாரம்:

عَنْ عَبْدِ الرَّحْمٰنِ بْنِ يَعْمَرَ رضي الله عنه قَالَ شَهِدْتُ رَسُولَ اللّٰهِ ﷺ فَأَتَاهُ نَاسٌ فَسَأَلُوهُ عَنِ الْحَجِّ فَقَالَ رَسُولُ اللّٰهِ ﷺ الْحَجُّ عَرَفَةُ فَمَنْ أَدْرَكَ لَيْلَةَ عَرَفَةَ قَبْلَ طُلُوعِ الْفَجْرِ مِنْ لَيْلَةِ جَمْعٍ فَقَدْ تَمَّ حَجُّهُ رواه النسائي برقم ٢٩٦٦

18. அறிவிப்பாளர்: உமர் இப்னுல் கத்தாப் رضي الله عنه, நூல்: ஸஹீஹுல் புகாரி, ஹதீஸ் எண்: 1.

அப்துர் ரஹ்மான் இப்னு யஃமுர் ﷺ கூறுகிறார்கள்: நான் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் (ஹஜ்ஜத்துல் விதாவில்) இருந்தேன். அவர்களிடம் சில மக்கள் வந்து ஹஜ்ஜைப் பற்றி கேட்டார்கள். அதற்கு ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: ஹஜ் என்பது அரஃபா(வில் தங்குவது)தான். ஆகவே, யார் பிறை பத்துடைய ஃபஜ்ர் (அதிகாலை) உதயமாகுவதற்கு முன்பு அரஃபாவில் இரவை பெற்று விடுவாரோ அவருடைய ஹஜ் முழுமையாக நிறைவடைந்துவிடும்.[19]

அரஃபாவில் தங்குவதுடைய நேரம் பிறை ஒன்பது அரஃபா உடைய தினத்தில் சூரியன் நடுப்பொழுதை தாண்டியதிலிருந்து ஆரம்பித்து பிறை பத்து யவ்முன் நஹ்ர் உடைய அதிகாலையில் முடிவுறுகிறது. ஆகவே, இந்த இரண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் சிறிது நேரமாவது அரஃபாவில் தங்குவது ஹஜ்ஜுடைய ருக்ன் ஆகும். இதை ஒருவர் தவறவிட்டுவிட்டால் அவருடைய ஹஜ் நிறைவேறாது.

3). **طَوَافُ الزِّ يَارَةَ -தவாஃபுஸ் ஸியாரா ஆகும்.**

இதை **طَوَافُ الْإِفَاضَةَ** - தவாஃபுல் இஃபாழா என்றும் **طَوَافُ الْفَرَضْ** - தவாஃபுல் ஃபர்ழ் என்றும் கூறப்படும். இந்த தவாஃப் ஹஜ்ஜுடைய ருக்னு என்பதில் அறிஞர்கள் ஒருமித்த கருத்தில் இருக்கின்றனர்.

அல்லாஹ் கூறுகின்றான்:

**ثُمَّ لْيَقْضُوا تَفَثَهُمْ وَلْيُوفُوا نُذُورَهُمْ وَلْيَطَّوَّفُوا بِالْبَيْتِ الْعَتِيقِ**

பிறகு, அவர்கள் தங்களது அழுக்குகளை நீக்கிக் கொள்ளட்டும். தங்களது நேர்ச்சைகளை நிறைவேற்றிக் கொள்ளட்டும். மிகப் பழமையான வீட்டை அவர்கள் தவாஃப் (சுற்றி அல்லாஹ்வை வழிபாடு) செய்யட்டும். (அல்குர்ஆன் 22:29)

**4). ஸஃபா மற்றும் மர்வா ஆகிய இரண்டு மலைகளுக்கு இடையில் ஸஃயி -விரைந்து நடக்க வேண்டும்.**

இதுவும் ஹஜ்ஜுடைய ருக்னு ஆகும்.

19. அறிவிப்பாளர்: அப்துர் ரஹ்மான் இப்னு யஃமுர் ﷺ, நூல்: நசாயி, எண்: 2966.

**عَنْ عُرْوَةَ رَحِمَهُ اللهُ عَنْ عَائِشَةَ رَضِيَ اللهُ عَنْهَا قَالَ قُلْتُ لَهَا إِنِّي لَأَظُنُّ رَجُلًا لَوْ لَمْ يَطُفْ بَيْنَ الصَّفَا وَالْمَرْوَةِ مَا ضَرَّهُ قَالَتْ لِمَ قُلْتُ لِأَنَّ اللهَ تَعَالَى يَقُولُ {إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللهِ} إِلَى آخِرِ الْآيَةِ فَقَالَتْ مَا أَتَمَّ اللهُ حَجَّ امْرِئٍ وَلَا عُمْرَتَهُ لَمْ يَطُفْ بَيْنَ الصَّفَا وَالْمَرْوَةِ وَلَوْ كَانَ كَمَا تَقُولُ لَكَانَ فَلَا جُنَاحَ عَلَيْهِ أَنْ لَا يَطَّوَّفَ بِهِمَا رواه مسلم برقم ٢٢٣٩**

உர்வா ﵀ கூறுகிறார்: நான் ஆயிஷா ﵂ அவர்களிடம் கூறினேன், ஒருவர் ஸஃபா மற்றும் மர்வா மலைகளுக்கு மத்தியில் ஸஃயி செய்யவில்லை என்றால் அது அவருக்கு (அவருடைய ஹஜ்ஜில்) எந்த பாதிப்பையும் ஏற்படுத்தாது என்று நான் கருதுகிறேன். ஆயிஷா ﵂ அவர்கள் ஏன் என்று கேட்டார்கள். நான் கூறினேன்: அல்லாஹ் இவ்வாறுதானே கூறுகின்றான்.

**إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللهِ فَمَنْ حَجَّ الْبَيْتَ أَوِ اعْتَمَرَ فَلَا جُنَاحَ عَلَيْهِ أَنْ يَطَّوَّفَ بِهِمَا وَمَنْ تَطَوَّعَ خَيْرًا فَإِنَّ اللهَ شَاكِرٌ عَلِيمٌ (١٥٨)**

நிச்சயமாக ஸஃபா, மர்வா (மலைகள்) அல்லாஹ்வின் அடையாளங்களில் உள்ளவை. ஆகவே, கஅபாவை ஹஜ்ஜு அல்லது உம்ரா செய்பவர் அவ்விரண்டையும் சுற்றி வருவது அவர் மீது அறவே குற்றமில்லை. எவர் நன்மையை உபரியாகச் செய்தாரோ நிச்சயமாக அல்லாஹ் நன்றி பாராட்டுபவன், நன்கறிந்தவன்.[20]

(அல்குர்ஆன் 2:158)

பிறகு, ஆயிஷா ﵂ கூறினார்கள்: ஸஃபா மர்வா மலைகளுக்கு இடையில் ஸஃயி செய்யாதவரின் ஹஜ்ஜையும் உம்ராவையும் அல்லாஹ் பூர்த்தி செய்ய மாட்டான். (உர்வாவே!) நீ கூறுவது போல்

20, அறிவிப்பாளர்: உர்வா ﵀ நூல்: முஸ்லிம், எண்: 2239

இருந்தால், “அவ்விரண்டுக்கும் இடையில் சுற்றாமல் இருப்பது குற்றமில்லை” என்று வசனம் வந்திருக்கும்.

**عَنْ حَبِيبَةَ بِنْتِ أَبِي تَجْرَاةَ ﵂ قَالَتْ دَخَلْنَا دَارَ أَبِي حُسَيْنٍ فِي نِسْوَةٍ مِنْ قُرَيْشٍ وَالنَّبِيُّ ﷺ يَطُوفُ بَيْنَ الصَّفَا وَالْمَرْوَةِ قَالَتْ وَهُوَ يَسْعَى يَدُورُ بِهِ إِزَارُهُ مِنْ شِدَّةِ السَّعْيِ وَهُوَ يَقُولُ لِأَصْحَابِهِ اسْعَوْا فَإِنَّ اللَّهَ كَتَبَ عَلَيْكُمْ السَّعْيَ رواه أحمد برقم ٢٦١٠١**

ஹபீபா பின்த் அபீ தஜ்ரா ﵂ (என்ற ஸஹாபி பெண்மணி) கூறுகிறார்: நாங்கள் குறைஷி பெண்கள் சிலருடன் அபூ ஹுசைன் அவர்களின் இல்லத்தில் நுழைந்தோம். அப்போது நபி ﷺ அவர்கள் ஸஃபா மற்றும் மர்வா மலைகளுக்கு மத்தியில் ஸஃயி செய்துகொண்டு இருந்தார்கள். அவர்கள் விரைந்து நடந்ததால் அவர்களின் கீழாடை இங்கும் அங்கும் அவர்களை சுற்றிக்கொண்டிருந்தது. நபி அவர்கள் தங்கள் தோழர்களை நோக்கி கூறிக்கொண்டிருந்தார்கள், நீங்கள் ஸஃயி செய்யுங்கள்! ஏனெனில், நிச்சயமாக அல்லாஹ் உங்கள் மீது ஸஃயியை கடமையாக்கியிருக்கின்றான்.[21]

இந்த ருக்னுகள் அனைத்தையும் கண்டிப்பாக நிறைவேற்ற வேண்டும். இவற்றை நிறைவேற்றாமல் ஹஜ் முழுமை அடையாது. இவற்றில் ஒன்றை விட்டுவிட்டாலும் ஹஜ் நிறைவேறாமல் போய்விடும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## ஹஜ்ஜுடைய வாஜிபுகள்

ஹஜ் செய்பவர் அவசியம் செய்ய வேண்டிய அமல்களை வாஜிபுகள் என்று கூறப்படும். இவற்றை விடுவதால் ஹஜ் வீணாகிவிடாது. மாறாக, அதற்கு பரிகாரம் செய்ய வேண்டும்.

21. அறிவிப்பாளர்: ஹபீபா பின்த் அபீ தஜ்ரா ﵂, நூல்: அஹ்மது, எண்: 26101

1). மார்க்கம் நிர்ணயித்த மீக்காத்தில் இருந்து இஹ்ராம் கட்ட வேண்டும். (அதாவது நிய்யத் செய்து தல்பியா கூறவேண்டும்.)

2). சூரியன் மறைகின்றவரை அரஃபாவில் தங்கவேண்டும். ஏனெனில், நபி ﷺ அவர்கள் பகல் நேரத்தில் அரஃபாவிற்கு வந்தார்கள். பிறகு, அதிலிருந்து சூரியன் மறைகின்றவரை அங்கு தங்கியிருந்தார்கள். ஆகவே, அவர்கள் கற்றுக் கொடுத்த முறைப்படியும் அவர்கள் செய்துகாட்டிய முறைப்படியும்தான் நாம் ஹஜ் செய்ய வேண்டும்.

**عَنْ جَابِرٍ رضي الله عنه قَالَ رَأَيْتُ النَّبِيَّ ﷺ يَرْمِي عَلَى رَاحِلَتِهِ يَوْمَ النَّحْرِ وَيَقُولُ لِتَأْخُذُوا مَنَاسِكَكُمْ فَإِنِّي لَا أَدْرِي لَعَلِّي لَا أَحُجُّ بَعْدَ حَجَّتِي هٰذِهِ رواه مسلم برقم ٢٢٨٦**

ஜாபிர் رضي الله عنه அறிவிக்கின்றார்கள்: யவ்முன்னஹ்ர் (துல்ஹஜ் பிறை பத்து அன்று) நபி ﷺ அவர்கள் தனது வாகனத்தில் இருந்தவர்களாக (ஜம்ராவில்) கல் எறிவதை நான் பார்த்தேன். மேலும், நபி ﷺ கூறினார்கள்: நீங்கள் உங்கள் ஹஜ் வணக்க வழிமுறைகளை என்னிடமிருந்து கற்றுக்கொள்ளுங்கள். நான் (எவ்வளவு காலம் வாழ்வேன் என்று) அறியமாட்டேன். நான் எனது இந்த ஹஜ்ஜுக்கு பின்னர் நிச்சயமாக நான் ஹஜ் செய்யாமல் போகலாம்.[22]

3). யார் முஸ்தலிஃபாவில் முந்திய இரவில் வந்து சேர்ந்து விட்டாரோ அவர் இரவின் நடுப்பொழுதுவரை அங்கு தங்கி இருக்க வேண்டும். இதுதான் நபி ﷺ அவர்களுடைய வழிமுறையாக இருந்தது.

4). தஷ்ரீக் உடைய நாள்களில் (-பிறை பதினொன்று, பன்னிரெண்டு, பதிமூன்று ஆகிய நாள்களில்) மினாவில் இரவு தங்க வேண்டும்.

5). தஷ்ரீக் உடைய நாள்களில் ஒவ்வொரு நாளும் சிறிய ஜம்ரா, நடு ஜம்ரா, பெரிய ஜம்ரா என்று மூன்று ஜம்ராக்களிலும் வரிசையாக கல்லெறிய வேண்டும்.

22. அறிவிப்பாளர்: ஜாபிர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 2286

6). ஆண்கள் தலைமுடியை முற்றிலும் சிரைக்க வேண்டும். அல்லது தலைமுடிகளை நன்கு குறைக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

لَتَدْخُلُنَّ الْمَسْجِدَ الْحَرَامَ إِنْ شَاءَ اللَّهُ آمِنِينَ مُحَلِّقِينَ رُءُوسَكُمْ وَمُقَصِّرِينَ

நிச்சயமாக நீங்கள் சிறப்புற்ற மஸ்ஜிதில் அச்சமற்றவர்களாகவும், உங்கள் தலைமுடிகளைச் சிரைத்துக் கொண்டவர்களாகவும், கத்தரித்துக் கொண்டவர்களாகவும் நுழைவீர்கள்.

(அல்குர்ஆன் 48:27)

இதுதான் நபி ﷺ அவர்களின் வழிமுறையும் கட்டளையும் ஆகும்.

7). ஹைழ் -மாதவிடாய் உள்ள பெண்கள், அல்லது நிஃபாஸ் -பிரசவ உதிரப்போக்குள்ள பெண்கள் அல்லாத மற்றவர்கள் தவாஃபுல் விதா -பயணத் தவாஃப் செய்ய வேண்டும்.

عَنِ ابْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ أُمِرَ النَّاسُ أَنْ يَكُونَ آخِرُ عَهْدِهِمْ بِالْبَيْتِ إِلَّا أَنَّهُ خُفِّفَ عَنْ الْحَائِضِ رواه البخاري برقم ١٦٣٦

இப்னு அப்பாஸ் رضي الله عنهما அவர்கள் கூறுகின்றார்கள்: மக்கள் (ஹஜ்ஜுடைய அமல்களில்) இறுதியாக கஃபாவை சந்திக்க வேண்டும் (-தவாஃப் செய்ய வேண்டும்) என்று கட்டளையிடப்பட்டார்கள். எனினும், மாதவிடாய் உள்ள பெண்களுக்கு சலுகை வழங்கப்பட்டது.[23]

யார் மேற்கூறப்பட்ட வாஜிபுகளில் ஒன்றை மறதியாக அல்லது வேண்டுமென்று விட்டுவிட்டால் அதற்காக அவர் குற்றப் பரிகாரம் கொடுக்க வேண்டும். இன்னும், ஹஜ் சரியாகிவிடும்.

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ مَنْ نَسِيَ مِنْ نُسُكِهِ شَيْئًا أَوْ تَرَكَهُ فَلْيُهْرِقْ دَمًا رواه مالك في الموطأ برقم ٨٣٦

23. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنهما, நூல்: புகாரி, எண்: 1636

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் ﵄ கூறினார்கள்: யார் தனது ஹஜ்ஜுடைய அமல்களில் எதையும் மறந்து விடுவாரோ அல்லது விட்டுவிடுவாரோ அவர் பலி கொடுக்கட்டும்.[24]

மேற்கூறப்பட்ட அமல்களைத் தவிர மற்ற அமல்கள் எல்லாம் சுன்னத்துகள் ஆகும். அதாவது கட்டாயமில்லை என்றாலும் அவற்றைப் பேணுவது மிகவும் நன்மையும் சிறப்பும் ஆகும்.

அவற்றில் முக்கியமான சில:

1). இஹ்ராம் - ஹஜ் அல்லது உம்ராவை ஆரம்பிக்கும்போது குளிப்பது, நறுமணம் பூசுவது, ஆண்கள் வெள்ளை நிற இரண்டு ஆடைகளை அணிவது.

2). இஹ்ராமுக்கு முன்பாக நகங்களை வெட்டுவது, மர்மஸ்தானம் மற்றும் அக்குள் முடிகளை அகற்றுவது, மீசை முடிகளை குறைப்பது.

3). ஹஜ்ஜுல் இஃப்ராத் மற்றும் ஹஜ்ஜுல் கிரான் செய்பவர்கள் மக்கா வந்து சேர்ந்தவுடன் முதலாவதாக தவாஃபுல் குதூம் செய்ய வேண்டும்.

4). தவாஃபுல் குதூம் உடைய முதல் மூன்று சுற்றுகளில் ரமல் செய்வது. (-கால் எட்டுகளை நெருக்கமாக வைத்து சற்று ராணுவ அணிவகுப்பு செல்வது போன்று செல்வது.)

5). தவாஃபுல் குதூம் நிறைவேற்றும்போது இழ்த்திபாஃ செய்ய வேண்டும். (இழ்த்திபாஃ என்றால் உடலின் மேற்புறத்தில் அணிந்திருக்கின்ற போர்வையை வலது புஜத்திற்கு கீழ் கொண்டு சென்று வலது புஜம் தெரியும்படியும் இடது புஜத்தை மறைத்தும் அணிவது.)

6). அரஃபாவிற்கு செல்வதற்கு முன்பு பிறை ஒன்பதுடைய இரவு மினாவில் தங்கி இருக்க வேண்டும்.

24. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: முவத்தா, எண்: 836

7). இஹ்ராம் கட்டியதிலிருந்து பிறை பத்து அன்று ஜம்ரத்துல் அகபாவில் கல் எறிகின்றவரை அதிகம் தல்பியா ஓதிக்கொண்டே இருக்க வேண்டும்.

8). முஸ்தலிஃஃபாவில் ஃஃபஜ்ர் தொழுதவுடன் முடிந்தால் அல்மஷ்அருல் ஹராம் என்ற இடத்திற்கருகில், சூரியன் உதிப்பதற்கு சிறிது நேரம் முன்புவரை தங்கி இருக்க வேண்டும். அப்படி முடியவில்லை என்றால் அந்த நேரம்வரை முஸ்தலிஃஃபாவில் எங்கு வேண்டுமானாலும் தங்கலாம்.

.....................................

*மூன்றாவது பாடம்*

# தடுக்கப்பட்டவை, குற்றப்பரிகாரம், பலிப்பிராணி

**முதல் சட்டவிளக்கம்**

## இஹ்ராம் உடைய நிலையில் தற்காலிகமாக தடுக்கப்பட்டவை

ஒருவர் ஹஜ் அல்லது உம்ராவிற்காக இஹ்ராமை ஆரம்பித்தவுடன் அதிலிருந்து அவர் ஹஜ் அல்லது உம்ராவை முடிக்கின்றவரை அவர் சில காரியங்களை செய்வது கூடாது என்று மார்க்கம் சட்டமாக்கியுள்ளது. அத்தகைய காரியங்களைத்தான் மார்க்கத்தில் மஹ்ளூராத் தடுக்கப்பட்டவை என்று கூறப்படும். அவை ஒன்பது காரியங்களாகும். அவற்றின் விளக்கம் பின்வருமாறு:

**1). ஆண்கள் தைக்கப்பட்ட ஆடைகளை அணிவது.**

அதாவது, சட்டை, சுர்வால், போன்று உடல் அமைப்புக்கு ஏற்ப இணைத்து தைக்கப்பட்ட ஆடைகளை ஆண்கள் இஹ்ராமுடைய நிலையில் அணிவது தடுப்பட்டதாகும். ஆனால், தைக்கப்படாத கீழ் ஆடை ஒருவருக்கு கிடைக்கவில்லை என்றால் அவர் சுர்வால் அணியலாம். பெண்கள் நிகாப் - முகத்திரை மற்றும் குஃப்பாஸ் - கையுறைகளை அணியக்கூடாது.

2). இஹ்ராம் உடைய நிய்யத் வைத்த பின்னர் உடலிலும் உடையிலும் நறுமணம் பூசுவது கூடாது. அவ்வாறே, நறுமணங்களை நுகர்வதும் கூடாது. ஆனால், செடி, கொடிகளின் வாசனைகளை நுகர்வது தவறில்லை. நறுமணம் இல்லாத சுர்மாக்களைக் கொண்டு கண்ணுக்கு சுர்மா இடுவது கூடும்.

3). மேலும், ஆண்கள் பெண்கள் யாரும் இஹ்ராமுடைய நிலையில் நகங்களை வெட்டுவதும் உடலில் உள்ள முடிகளை அகற்றுவதும்

கூடாது. தலையை கழுவுவதாக இருந்தால் மென்மையாக கழுவ வேண்டும். அப்போது முடிகள் தானாக உதிர்ந்தால் அது குற்றமில்லை. அவ்வாறே நகங்கள் உடைந்துவிட்டால் அவற்றை எறிவது கூடும்.

4). ஆண்கள் இஹ்ராமுடைய நிலையில் துணி போன்றவற்றால் தலையை மறைப்பது கூடாது. ஆனால், நிழலுக்காக கூடாரங்களில் அல்லது மரங்களின் நிழல்களில் அமர்வது கூடும். வெயில் அல்லது மழைக்காக குடைகளை பயன்படுத்துவதும் கூடும். இஹ்ராமுடைய நிலையில் பெண்கள் நிகாப், புர்கா போன்ற முகத்திரைகள் உள்ளவற்றைப் பயன்படுத்தி முகத்தை மறைப்பது கூடாது. ஆண்கள் அருகில் இருந்தால் தலையின் மீது போடப்பட்டுள்ள தாவானியைக் கொண்டு தற்காலிகமாக முகத்தை மறைக்க வேண்டும். அவ்வாறே, பெண்கள் கையுறைகளை அணிவது கூடாது. மற்றபடி பெண்கள் தங்களுக்கு தகுந்த ஆடைகளை அணியலாம்.

யார் நறுமணத்தை பூசிவிடுவாரோ, அல்லது தனது தலையை மறைப்பாரோ, அல்லது தைக்கப்பட்ட ஆடையை அணிவாரோ, இவற்றை அறியாமல் செய்தாலும் அல்லது மறந்து செய்தாலும் அல்லது நிர்ப்பந்திக்கப்பட்டு செய்தாலும் அவர் மீது எவ்வித குற்றமும் இல்லை.

وَعَنْ أَبِي ذَرٍّ الْغِفَارِيِّ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ اللهَ تَجَاوَزَ عَنْ أُمَّتِي الْخَطَأَ وَالنِّسْيَانَ وَمَا اسْتُكْرِهُوا عَلَيْهِ رَوَاهُ اِبْنُ مَاجَةَ بِرَقْمِ ٢٠٣٣

ரசூலுல்லாஹ் ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் எனது உம்மத்தை விட்டும் அவர்கள் தவறுதலாக செய்ததையும், மறதியில் செய்ததையும், இன்னும் நிர்ப்பந்திக்கப்பட்டு செய்ததையும் மன்னித்து விட்டான்.[25]

وَعَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ عَنِ النَّبِيِّ ﷺ قَالَ إِنَّ اللهَ وَضَعَ عَنْ أُمَّتِي الْخَطَأَ

25. அறிவிப்பாளர்: அபூ தர் ﵁, நூல்: சுனன் இப்னு மாஜா, ஹதீஸ் எண்: 2033.

وَالنِّسْيَانَ وَمَا اسْتُكْرِهُوا عَلَيْهِ رَوَاهُ اِبْنُ مَاجَةَ بِرَقْمِ ٢٠٣٥

நபி ﷺ கூறினார்கள்: நிச்சயமாக அல்லாஹ் எனது உம்மத்தை விட்டும் அவர்கள் தவறுதலாக செய்ததையும், மறதியில் செய்ததையும், இன்னும் நிர்ப்பந்திக்கப்பட்டு செய்ததையும் மன்னித்து விட்டான்.[26]

அறியாதவர் அறிந்து கொண்டால், மறந்தவருக்கு நினைவு வந்து விட்டால், நிர்ப்பந்திக்கப்பட்டவருடைய நிர்ப்பந்தம் நீங்கிவிட்டால் அவர்கள் உடனடியாக தடுக்கப்பட்ட அந்த செயலை விட்டுவிட வேண்டும்.

5). இஹ்ராமுடைய நிலையில் தனக்கோ அல்லது பிறருக்கோ திருமண ஒப்பந்தம் செய்வதும் தடுக்கப்பட்டதாகும்.

6). இஹ்ராமுடைய நிலையில் மனைவியுடன் அவருடைய பிறப்புறுப்பில் உடலுறவு கொள்வது தடுக்கப்பட்டதாகும். ஒருவர் ஹஜ்ஜை முழுமையாக முடிப்பதற்குள் அதாவது ஒருவர் பிறை பத்து அன்று செய்ய வேண்டிய (கல் எறிதல், குர்பானி கொடுத்தல், முடி எடுத்தல் ஆகிய) முதல் மூன்று காரியங்களுக்கு முன்னராக யாராவது உடலுறவு வைத்துவிட்டால் அவருடைய ஹஜ் முற்றிலும் வீணாகிவிடும். அரஃபாவில் தங்கிய பின்னர் இந்த செயல் நிகழ்ந்தாலும் சரி ஹஜ் வீணாகிவிடும்.

7). மனைவியுடன் வேறு வழிகளில் புணர்வதும் இஹ்ராமுடைய நிலையில் தடுக்கப்பட்டதாகும். ஆனால், இந்த செயல் ஹஜ்ஜை முறித்துவிடாது. அவ்வாறே, முத்தமிடுவது, இச்சையுடன் தொடுவது, இச்சையுடன் பார்ப்பதும் இஹ்ராமுடைய நிலையில் கூடாது.

8). தரையில் உள்ள வேட்டைப் பிராணிகளை வேட்டையாடுவதும் கொல்வதும் இஹ்ராமுடைய நிலையில் தடுக்கப்பட்டதாகும். மற்றபடி தீயவை என்று வர்ணிக்கப்பட்ட மிருகங்களை எந்த இடத்தில் வேண்டுமானாலும் யார் வேண்டுமானாலும் கொல்லலாம். ஹரம் உடைய எல்லைக்கு வெளியில் அல்லது ஹரம் எல்லைக்குள்,

26. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ؓ, நூல்: சுனன் இப்னு மாஜா, ஹதீஸ் எண்: 2035

அவ்வாறே, இஹ்ராமில் இருப்பவர் அல்லது இஹ்ராமில் இல்லாதவர் என அனைவரும் அந்த மிருகங்களை கொல்வது கூடும். அவை: காகம், எலி, தேள், பருந்து, பாம்பு, வெறிபிடித்த நாய் ஆகும்.

தரையில் உள்ள வேட்டைப் பிராணிகளை வேறு யாரும் வேட்டையாடுவதற்கும் இஹ்ராமில் இருப்பவர் உதவுவது கூடாது. வேட்டைப் பிராணிகளை பிறருக்கு காட்டியும் கொடுக்கக் கூடாது. இஹ்ராமில் இல்லாத மற்றவர்கள் தனக்காக வேட்டையாடியதையும் முஹ்ரிம் (-இஹ்ராமில் உள்ளவர்) புசிப்பது கூடாது.



9). முஹ்ரிம், முஹ்ரிம் அல்லாதவர் என யாரும் ஹரம் எல்லையில் உள்ள மரங்களை வெட்டுவது கூடாது. மேலும் இடையூறு தராத பசுமையான செடிகொடிகளையும் தாவரங்களையும் வெட்டக்கூடாது. மரத்தின் கிளைகள் பாதைகளில் நீட்டிக்கொண்டு இடையூறு தந்தால் அந்த கிளைகளை மட்டும் வெட்டுவது கூடும். ஹரம் எல்லைக்குள் இருக்கின்ற இத்குர் என்ற செடிகளையும் மனிதர்கள் வளர்த்த செடிகளையும் மரங்களையும் வெட்டுவது கூடும் என்பது ஏகோபித்த கருத்தாகும்.

10). ஹரம் எல்லைக்குள் கீழே கிடக்கின்ற பொருட்களை எடுப்பது கூடாது. இந்த சட்டம் முஹ்ரிம் மற்றும் முஹ்ரிம் அல்லாதவர் இருவருக்கும் சமமானதாகும். யாராவது ஹரம் எல்லையில் கீழே கிடக்கின்ற பொருளை எடுத்தால் அது யாருடையது என்று விசாரித்து ஒப்படைக்க வேண்டும். அல்லது அரசாங்கம் அதற்கென்று ஏற்படுத்தி இருக்கின்ற துறையிடம் ஒப்படைக்க வேண்டும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## ஹஜ்ஜில் தடுக்கப்பட்ட காரியங்களை செய்தால் பரிகாரம்

**தடுக்கப்பட்ட காரியங்களை செய்தவருக்குரிய பரிகாரம்:**

முடியை சிரைத்தால்,

நகங்களை வெட்டிவிட்டால்,

தைக்கப்பட்ட ஆடைகளை அணிந்தால்,

நறுமணம் பூசினால்,

தலையை மறைத்தால்,

இச்சையுடன் பார்ப்பதைக்கொண்டு விந்துவை வெளியேற்றிவிட்டால்,

விந்து வெளியேறாமல் மனைவியை கட்டி அணைத்தால்

மேற்கூறப்பட்ட எல்லா குற்றங்களுக்கும் பரிகாரம் என்னவென்றால் ஒன்று மூன்று நோன்புகள் வைக்கலாம். அல்லது ஆறு ஏழைகளுக்கு உணவளிக்கலாம். அல்லது ஓர் ஆட்டை அறுத்து ஏழைகளுக்கு பங்கீடு செய்யலாம். இந்த மூன்று பரிகாரங்களில் எதை வேண்டுமானாலும் செய்யலாம்.

ஆதாரம்:

**عَنْ كَعْبِ بْنِ عُجْرَةَ رضي الله عنه عَنْ رَسُولِ اللهِ ﷺ أَنَّهُ قَالَ لَعَلَّكَ آذَاكَ هَوَامُّكَ قَالَ نَعَمْ يَا رَسُولَ اللهِ فَقَالَ رَسُولُ اللهِ ﷺ اِحْلِقْ رَأْسَكَ وَصُمْ ثَلَاثَةَ أَيَّامٍ أَوْ أَطْعِمْ سِتَّةَ مَسَاكِينَ أَوْ انْسُكْ بِشَاةٍ رواه البخاري برقم ١٦٨٦**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கஅப் இப்னு உஜ்ரா رضي الله عنه என்ற தோழரை நோக்கி, உமது தலையில் உள்ள பேன்கள் உமக்கு தொந்தரவு தருகின்றனவோ என்று கூறினார்கள். அதற்கவர், அல்லாஹ்வின் தூதரே! ஆம் என்றார். ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: அப்படியென்றால், உமது தலையை சிரைத்துக்கொள்! இன்னும் மூன்று நோன்பு வை! அல்லது ஆறு ஏழைகளுக்கு உணவளி. அல்லது ஓர் ஆட்டை அறுத்து குர்பானி கொடு![27]

**கருத்து:** இந்த நபிமொழியில் நபி ﷺ அவர்கள் கூறிய பரிகாரம் தலைமுடியை சிரைத்ததற்காக இருந்தாலும் அதையே மற்ற தடுக்கப்பட்ட செயல்களுக்கும் பரிகாரமாக அறிஞர்கள் கருதுகிறார்கள்.

27. அறிவிப்பாளர்: கஅப் இப்னு உஜ்ரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1686

தலையை சிரைப்பது தடுக்கப்பட்ட காரியமாக இருப்பது போன்றே அது அல்லாத மற்ற காரியங்களும் தடுக்கப்பட்டவையாகும். ஆகவே, தடுக்கப்பட்ட காரியங்களில் ஒன்றுக்கு கூறப்பட்ட பரிகாரம் மற்ற தடுக்கப்பட்ட காரியங்களுக்கும் பொருந்தும் என்று கருதப்படுகின்றது.

ஒருவர் வேட்டைப் பிராணியை கொன்றுவிட்டால் அந்த பிராணி போன்ற ஒரு கால்நடையை அறுக்கலாம். அல்லது அது போன்ற கால்நடையின் விலையை நிர்ணயித்து அதன் மூலம் உணவுகளை வாங்கி ஒவ்வொரு ஏழைக்கும் ஒரு முத்து[28] கோதுமை அல்லது பாதி ஸாஃ[29] பேரித்தம்பழம் அல்லது பார்லி கொடுக்க வேண்டும். அல்லது எத்தனை ஏழைகளுக்கு அவற்றை பங்கிடமுடியுமோ அந்த எண்ணிக்கை அளவு நோன்பு வைக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

**يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا لَا تَقْتُلُوا الصَّيْدَ وَأَنْتُمْ حُرُمٌ وَمَنْ قَتَلَهُ مِنْكُمْ مُتَعَمِّدًا فَجَزَاءٌ مِثْلُ مَا قَتَلَ مِنَ النَّعَمِ يَحْكُمُ بِهِ ذَوَا عَدْلٍ مِنْكُمْ هَدْيًا بَالِغَ الْكَعْبَةِ أَوْ كَفَّارَةٌ طَعَامُ مَسَاكِينَ أَوْ عَدْلُ ذٰلِكَ صِيَامًا لِيَذُوقَ وَبَالَ أَمْرِهِ**

நம்பிக்கையாளர்களே! நீங்கள் இஹ்ராமுடையவர்களாக இருக்கும் போது வேட்டை(ப் பிராணி)களைக் கொல்லாதீர்கள். உங்களில் எவர் அதை வேண்டுமென்றே கொன்றாரோ (ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய) கால்நடைகளில் தான் கொன்றதற்கு ஒப்பான(தை பரிகாரமாக கொடுப்பதுதான் அவர)து தண்டனையாகும். உங்களில் நேர்மையான இருவர் அதற்கு தீர்ப்பளிப்பர். கஅபாவை அடைகிற பலியாக (அது இருக்கவேண்டும்). அல்லது (அதன் மதிப்பின் அளவிற்கு) ஏழைகளுக்கு உணவளிப்பது பரிகாரமாகும். அல்லது (உணவளிக்க வசதியில்லாதவன்) அதற்குச் சமமான எண்ணிக்கை அளவு நோன்பு நோற்க வேண்டும். (அல்குர்ஆன் 5:95)

28. முத் என்பது சற்றேரக்குறைய 510 கிராம் ஆகும்
29. ஒரு ஸாஃ என்பது மூன்று கிலோ ஆகும்.

ஒருவர் பிறை பத்துக்கு முன்பாக, முதல் தஹல்லுல்[30] ஏற்படுவதற்கு முன்பாக மனைவியுடன் உடலுறவு கொண்டுவிட்டால் அல்லது கட்டி அணைப்பதைக்கொண்டு அல்லது முத்தமிடுவதைக்கொண்டு, அல்லது இச்சையுடன் தொடுவதைக்கொண்டு, அல்லது பலமுறை பார்ப்பதைக்கொண்டு விந்துவை வெளியேற்றிவிட்டால் அவருடைய ஹஜ் வீணாகிவிடும். இந்த காரியங்களில் எதையும் அவர் அறிந்து செய்தாலும், அறியாமல் செய்தாலும், மறந்து செய்தாலும், வேண்டுமென்று செய்தாலும், நிர்ப்பந்திக்கப்பட்டு செய்தாலும் ஹஜ் முறிந்துவிடும் என்பதில் எவ்வித மாற்றுக் கருத்தும் இல்லை. இவர் இந்த குற்றத்திற்காக ஓர் ஒட்டகத்தை குர்பானி கொடுக்க வேண்டும். ஹஜ்ஜையும் கழா செய்யவேண்டும். அல்லாஹ்விடம் பாவமன்னிப்பும் கேட்க வேண்டும்.

முதல் தஹல்லுல் ஏற்பட்ட பின்னர், பிறை பத்துக்குப் பிறகு தவாஃப் ஸியாரா[31] செய்வதற்கு முன்னர் இந்த காரியங்களில் ஒன்றை செய்துவிட்டால் ஹஜ் வீணாகிவிடாது. ஆனால், ஓர் ஆட்டை குர்பானி கொடுக்க வேண்டும்.

இஹ்ராமுடைய நிலையில் ஒருவர் திருமண ஒப்பந்தம் தனக்கோ அல்லது பிறருக்கோ செய்தால் அந்த ஒப்பந்தம் செல்லாது. ஆனால், இந்த செயலுக்கு ஃபித்யா -குற்றப்பரிகாரம் ஏதும் இல்லை.

ஹரம் எல்லைக்குள் உள்ள மரங்கள் அல்லது செடிகளை வெட்டி விட்டால் சிறிய மரமாக இருந்தால் ஓர் ஆட்டை குர்பானி கொடுக்க வேண்டும். பெரிய மரமாக இருந்தால் ஒரு மாட்டை குர்பானி கொடுக்க வேண்டும். சின்ன செடிகளாக அல்லது இலைகளாக இருந்தால் அதற்குரிய விலையை நிர்ணயம் செய்து அதை தர்மம் செய்ய வேண்டும்.

30. இஹ்ராமில் இருந்து வெளியாகுவது,
31. ஹஜ்ஜுடைய ஃபர்ளான தவஃப்

ஒருவர் இந்த சட்டங்களை அறிந்திருந்து, வேண்டுமென்று செய்தால் அவர் மீது மேற்கூறப்பட்ட ஃபித்யாக்கள் கடமையாகும். ஆனால், ஒருவர் சட்டத்தை அறியாமல் அல்லது மறதியில் இந்த தடுக்கப்பட்ட காரியங்களை செய்தால் அவர் மீது ஃபித்யா[32] கடமையாகாது.

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## ஹத்ய் - குர்பானி பிராணிகள் மற்றும் அவற்றின் சட்டங்கள்



ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய கால்நடைகளில் எதை அல்லாஹ்வுடைய வீட்டுக்கு அருகில் கொண்டுவரப்பட்டு அல்லாஹ்விற்காக அறுக்கப்படுகின்றதோ அதை ஹத்ய் என்று கூறப்படும்.

**ஹத்ய் உடைய வகைகள்**

**1). ஹஜ் தமத்துஃ மற்றும் ஹஜ் கிரான் உடைய ஹத்ய்.** யார் மக்கா வாசியாக இல்லையோ அவர்கள் ஹஜ் தமத்துஃ அல்லது ஹஜ் கிரான் செய்யும்போது அவர்கள் மீது இந்த ஹத்ய் கடமையாகும். இது ஹஜ் வணக்கத்தை சேர்ந்த குர்பானி ஆகும். குற்றத்திற்காக கொடுக்கப்படுகின்ற குர்பானி அல்ல.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَمَنْ تَمَتَّعَ بِالْعُمْرَةِ إِلَى الْحَجِّ فَمَا اسْتَيْسَرَ مِنَ الْهَدْيِ

எவர் உம்ராவைக் கொண்டு ஹஜ்ஜு வரை சுகம் அனுபவிப்பாரோ (அவர்) பலியில் சாத்தியமானது (கொடுக்கவும்). (அல்குர்ஆன் 2:196)

ஹத்ய் கிடைக்கவில்லை என்றால் அல்லது அதற்குரிய கிரயம் தன்னிடம் இல்லையென்றால் அவர் மொத்தம் பத்து நோன்புகள் வைக்க வேண்டும். மூன்று நோன்புகள் அவர் ஹஜ்ஜில் இருக்கும்போதே வைத்துவிட வேண்டும். அந்த மூன்று நோன்புகளை

32. குற்றப் பரிகாரம்

தஷ்ரீக் உடைய நாள்களிலும் வைக்கலாம். மற்ற ஏழு நோன்புகளை ஊர் திரும்பியவுடன் வைக்கலாம்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَمَنْ لَمْ يَجِدْ فَصِيَامُ ثَلَاثَةِ أَيَّامٍ فِي الْحَجِّ وَسَبْعَةٍ إِذَا رَجَعْتُمْ تِلْكَ عَشَرَةٌ كَامِلَةٌ ذَلِكَ لِمَنْ لَمْ يَكُنْ أَهْلُهُ حَاضِرِي الْمَسْجِدِ الْحَرَامِ

எவர் (பலியை) பெறவில்லையோ, அவர் ஹஜ்ஜில் மூன்று நாட்கள் நோன்பும் நீங்கள் திரும்பியபின் ஏழு நோன்பும் (வைக்க வேண்டும்). அவை முழுமையான பத்தாகும். இது எவருடைய குடும்பம் அல் மஸ்ஜிதுல் ஹராமில் வசிப்பவர்களாக இருக்கவில்லையோ அவருக்குத்தான். (அல்குர்ஆன் 2:196)

ஹஜ் தமத்துஃ மற்றும் ஹஜ் கிரான் உடைய குர்பானியிலிருந்து ஹஜ் செய்பவர் புசிப்பது விரும்பத்தக்க செயலாகும்.

فَكُلُوا مِنْهَا وَأَطْعِمُوا الْقَانِعَ وَالْمُعْتَرَّ

அவற்றிலிருந்து சாப்பிடுங்கள், இன்னும் யாசிப்பவருக்கும் எதிர் பார்த்து வருபவருக்கும் உணவளியுங்கள். (அல்குர்ஆன் 22:36)

2). **هدي الجبران -ஹத்யுல் ஜப்ரான்:** அதாவது ஒருவர் ஹஜ் அல்லது உம்ராவில் கடமையான ஓர் அமலை செய்யாது விட்டுவிட்டால் அதை நிவர்த்தி செய்வதற்காக, அல்லது இஹ்ராமில் தடுக்கப்பட்ட செயலை செய்ததற்காக, அல்லது இஹ்ராம் கட்டிய பின்னர் ஹஜ் அல்லது உம்ரா செய்ய முடியாமல் பாதி வழியில் ஊர் திரும்ப வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டால் கொடுக்க வேண்டிய குர்பானிக்கு ஹத்யுல் ஜப்ரான் என்று கூறப்படும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَإِنْ أُحْصِرْتُمْ فَمَا اسْتَيْسَرَ مِنَ الْهَدْيِ

நீங்கள் தடுக்கப்பட்டால் பலியில் சாத்தியமானது (பரிகாரமாகும்).
(அல்குர்ஆன் 2:196)

عَنْ عَبْدِ اللهِ بْنِ عَبَّاسٍ رضي الله عنهما قَالَ مَنْ نَسِيَ مِنْ نُسُكِهِ شَيْئًا أَوْ تَرَكَهُ فَلْيُهْرِقْ دَمًا رواه مالك في الموطأ برقم ٨٣٦

அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் رضي الله عنهما கூறினார்கள்: யார் தனது ஹஜ்ஜுடைய அமல்களில் எதையும் மறந்துவிடுவாரோ அல்லது விட்டுவிடுவாரோ அவர் பலி கொடுக்கட்டும்.[33]

இந்த வகையைச் சேர்ந்த குர்பானி மாமிசங்களை குர்பானி கொடுப்பவர் புசிப்பது கூடாது. மாறாக, இவற்றை முழுமையாக ஹரம் பகுதியில் உள்ள ஏழைகளுக்கு பகிர்ந்து தர்மமாக கொடுக்க வேண்டும்.

3). **هدي التطوع -ஹத்யுத் ததவ்வு:** அதாவது ஹஜ் அல்லது உம்ராவிற்கு வருபவர் தானாக மனமுவந்து உபரியாக தன்னால் இயன்றளவு குர்பானி கொடுத்து தானும் உண்டு பிறருக்கும் உணவளிப்பது விரும்பத்தக்க செயலாகும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

عَنْ عَلِي رضي الله عنه قَالَ أَهْدَى النَّبِيُّ ﷺ مِائَةَ بَدَنَةٍ فَأَمَرَنِي بِلُحُومِهَا فَقَسَمْتُهَا ثُمَّ أَمَرَنِي بِجِلَالِهَا فَقَسَمْتُهَا ثُمَّ بِجُلُودِهَا فَقَسَمْتُهَا رواه البخاري برقم ١٦٠٣

நபி ﷺ அவர்கள் நூறு ஒட்டகங்களை குர்பானி கொடுத்தார்கள். அதன் மாமிசங்களையும் பங்கு வைக்கும்படி எனக்கு கட்டளையிட நான் அவற்றை பங்கு வைத்துக் கொடுத்தேன். பிறகு, அவற்றின் மீது போடப்பட்டிருந்த இருக்கைகளையும் பங்குவைக்கும்படி எனக்கு கட்டளையிட நான் அவற்றையும் பங்குவைத்தேன். பிறகு, அவற்றின்

33. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் رضي الله عنهما, நூல்: முவத்தா, எண்: 836

தோல்களையும் பங்குவைக்கும்படி கூற நான் அவற்றையும் பங்குவைத்தேன்.[34]

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ﷺ قَالَ وَفِيْهِ ثُمَّ انْصَرَفَ إِلَى الْمَنْحَرِ فَنَحَرَ ثَلَاثًا وَسِتِّينَ بِيَدِهِ ثُمَّ أَعْطَى عَلِيًّا فَنَحَرَ مَا غَبَرَ وَأَشْرَكَهُ فِي هَدْيِهِ ثُمَّ أَمَرَ مِنْ كُلِّ بَدَنَةٍ بِبَضْعَةٍ فَجُعِلَتْ فِي قِدْرٍ فَطُبِخَتْ فَأَكَلَا مِنْ لَحْمِهَا وَشَرِبَا مِنْ مَرَقِهَا رواه مسلم برقم ٢١٣٧**

பிறகு, நபி ﷺ அவர்கள் குர்பானி அறுக்கும் இடத்திற்கு வந்தார்கள். தனது கரத்தால் அறுபத்தி மூன்று ஒட்டகங்களை அறுத்தார்கள். பிறகு அலி ؓ அவர்களிடம் கொடுத்தார்கள். மீதமுள்ளதை அலி ؓ அவர்கள் அறுத்தார்கள். நபி ﷺ அவர்கள் தனது குர்பானிகளில் அலி ؓ அவர்களையும் சேர்த்துக் கொண்டார்கள். பிறகு, அவர்கள் கட்டளையிட ஒவ்வொரு ஒட்டகத்திலிருந்தும் ஒரு துண்டு அறுக்கப்பட்டு ஒரு பாத்திரத்தில் வைத்து சமைக்கப்பட்டது. நபி ﷺ அவர்களும் அலி ؓ அவர்களும் அந்த மாமிசத்திலிருந்தும் சாப்பிட்டார்கள். இன்னும் அதன் சால்னாவிலிருந்தும் இருவரும் குடித்தார்கள்.[35]

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللهِ ؓ أَنَّ رَسُولَ اللهِ ﷺ أَمَرَ مِنْ كُلِّ جَزُورٍ بِبَضْعَةٍ فَجُعِلَتْ فِي قِدْرٍ فَأَكَلُوا مِنْ اللَّحْمِ وَحَسَوْا مِنَ الْمَرَقِ رواه ابن ماجة برقم ٣١٤٩**

ஒவ்வொரு ஒட்டகத்திலிருந்தும் ஒரு துண்டை அறுத்து சமைக்கும்படி ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கட்டளையிட அவ்வாறே ஒரு பானையில் வை(த்து சமை)க்கப்பட்டது. அவர்கள்

34. அறிவிப்பாளர்: அலி ؓ, நூல்: புகாரி, எண்: 1603
35. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ؓ, நூல்: முஸ்லிம், எண்: 2137

அதன் மாமிசத்திலிருந்து சாப்பிட்டார்கள். அந்த சால்னாவிலிருந்து அள்ளி குடித்தார்கள்.[36]

முஹ்ரிம் அல்லாதவர் அதாவது இஹ்ராம் கட்டி உம்ரா அல்லது ஹஜ்ஜுக்கு போகாதவர்கள் கூட அல்லாஹ்வின் நெருக்கத்தை பெறுவதற்காக குர்பானி பிராணிகளை மக்காவிற்கு அனுப்பி அங்கு அறுத்து பங்கிடும்படி செய்யலாம். அப்படி ஒருவர் செய்தால் அவர் இஹ்ராமில் இருப்பவர் பேணவேண்டிய விஷயங்களை பேணவேண்டும் என்ற அவசியம் இல்லை.



4). **ஹத்யுன் நத்ர் -** நேர்ச்சை செய்யப்பட்ட குர்பானி பிராணி. அதாவது, அல்லாஹ்விற்காக அல்லாஹ்வின் வீட்டுக்கருகில் (-ஹரம் எல்லையில்) அறுப்பதற்காக நேர்ச்சை செய்யப்பட்டு கொண்டு வரப்பட்ட பிராணியை அங்கு வைத்து அறுத்து ஏழைகளுக்கு பங்கீடு செய்ய வேண்டும். அல்லது நான் அல்லாஹ்விற்காக ஹரமில் உதாரணமாக ஓர் ஆடு குர்பானி கொடுப்பேன் என்று நேர்ச்சை செய்துகொண்டால் அந்த நேர்ச்சையை நிறைவேற்ற வேண்டும். இப்படி நேர்ச்சை செய்தவர் ஹரம் எல்லைக்குள் ஓர் ஆட்டை அறுத்து தனது நேர்ச்சையை நிறைவேற்ற வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

ثُمَّ لْيَقْضُوا تَفَثَهُمْ وَلْيُوفُوا نُذُورَهُمْ

பிறகு, அவர்கள் தங்களது அழுக்குகளை நீக்கிக் கொள்ளட்டும். தங்களது நேர்ச்சைகளை நிறைவேற்றிக் கொள்ளட்டும்.

(அல்குர்ஆன் 22:29)

நேர்ச்சை செய்து குர்பானி கொடுப்பவர் அந்த குர்பானி மாமிசத்திலிருந்து சாப்பிடுவது கூடாது.

36. அறிவிப்பாளர்: ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் ﷺ, நூல்: இப்னு மாஜா, எண்: 3149

## ஹத்ய் - குர்பானி பிராணிகளை அறுப்பதற்குரிய நேரம்

தமத்துஃ மற்றும் கிரான் ஹஜ்ஜுடைய குர்பானிகளை அறுப்பதற்குரிய நேரம் (துல்ஹஜ்) பிறை பத்து யவ்முன் நஹ்ர் உடைய காலை பெருநாள் தொழுகையிலிருந்து ஆரம்பமாகிறது. பிறகு, பிறை பதிமூன்று அன்று சூரியன் மறைகின்ற வரை இதன் நேரம் நீடித்து இருக்கின்றது.

தமுல் இஹ்ஸார் - ஹஜ் அல்லது உம்ரா பயணத்தை தொடரமுடியாமல் தடுக்கப்பட்டதால் கொடுக்கப்படுகின்ற குர்பானியை அதற்குரிய காரணம் ஏற்பட்ட பின்னர் கொடுக்க வேண்டும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَإِنْ أُحْصِرْتُمْ فَمَا اسْتَيْسَرَ مِنَ الْهَدْيِ

நீங்கள் தடுக்கப்பட்டால் பலியில் சாத்தியமானது (பரிகாரமாகும்).
(அல்குர்ஆன் 2:196)

இஹ்ராமில் தடுக்கப்பட்ட செயல்களை செய்வதால் கொடுப்படக்கூடிய குர்பானிகள் உடைய நேரம் அந்த குற்றங்கள் ஏற்பட்ட பின்னர் ஆகும்.

அவ்வாறே, ஒரு வாஜிபை விட்டுவிட்டதால் கொடுக்கப்படக்கூடிய குர்பானியின் நேரம் அந்த வாஜிபை விட்டதற்கு பின்னர் ஆகும்.

## குர்பானிகளை அறுப்பதற்குரிய இடம்

தமத்துஃ மற்றும் கிரான் ஹஜ்ஜுடைய குர்பானிகளை மினாவில் அறுப்பது சுன்னாவாகும். ஆனால், ஹரம் உடைய பகுதியில் எங்கு அறுத்தாலும் அந்த குர்பானி கூடிவிடும்.

அவ்வாறே, குற்றப்பரிகாரமாக கொடுக்கப்படுகின்ற குர்பானியும் வாஜிபை விட்டதால் கொடுக்கப்படுகின்ற குர்பானியும் ஹரம் எல்லைக்குள்தான் கொடுக்க வேண்டும்.

இஹ்ஸார் -தடுக்கப்பட்டதால் கொடுக்கப்படுகின்ற குர்பானியை எந்த இடத்தில் தடுக்கப்பட்டாரோ அங்கேயே அறுத்துவிடலாம்.

பரிகாரத்திற்காக நோற்கப்படுகின்ற நோன்புகளை எங்கு வேண்டுமானாலும் நோற்கலாம். முஸ்தஹப் -விரும்பத்தக்கது என்னவென்றால் மூன்று நோன்புகளை ஹஜ்ஜில் இருக்கும்போதும் மீதம் ஏழு நோன்புகளை ஹஜ் முடித்து இல்லம் திரும்பிய பிறகும் நோற்பதாகும்.



فَإِذَا أَمِنْتُمْ فَمَنْ تَمَتَّعَ بِالْعُمْرَةِ إِلَى الْحَجِّ فَمَا اسْتَيْسَرَ مِنَ الْهَدْيِ فَمَنْ لَمْ يَجِدْ فَصِيَامُ ثَلَاثَةِ أَيَّامٍ فِي الْحَجِّ وَسَبْعَةٍ إِذَا رَجَعْتُمْ تِلْكَ عَشَرَةٌ كَامِلَةٌ

நீங்கள் பாதுகாப்புப் பெற்றால் எவர் உம்ராவைக் கொண்டு ஹஜ்ஜு வரை சுகம் அனுபவிப்பாரோ (அவர்) பலியில் சாத்தியமானது (கொடுக்கவும்). எவர் (பலியை) பெறவில்லையோ, அவர் ஹஜ்ஜில் மூன்று நாட்கள் நோன்பும் நீங்கள் திரும்பியபின் ஏழும் (வைக்க வேண்டும்). அவை முழுமையான பத்தாகும். (அல்குர்ஆன் 2:196)

ஹஜ் அல்லது உம்ராவில் இருப்பவர் தான் கொடுக்கக்கூடிய குர்பானிகளை தானாக அறுத்து கொடுப்பது முஸ்தஹப் -விரும்பத்தக்கது ஆகும். அவர் வேறு யாரையும் இதற்காக நியமித்து பொறுப்பு கொடுத்தால் அதுவும் கூடும். இது அவர் மீது குற்றமாகாது.

பிராணிகளை அறுக்கும்போது,

بِسْمِ اللهِ، اللّٰهُمَّ هٰذَا مِنْكَ وَلَكَ.

அல்லாஹ்வின் பெயரால் (அறுக்கிறேன்). அல்லாஹ்வே! இது உன் புறத்திலிருந்து (எனக்கு கொடுக்கப்பட்டது. இப்போது இது) உனக்காகவே (அறுக்கப்படுகிறது).

என்று கூறுவது முஸ்தஹப் - விரும்பத்தக்கது ஆகும்.

ஹத்ய் -ஹஜ்ஜில் அறுக்கப்படுகின்ற குர்பானி பிராணிகளின் நிபந்தனைகளும் உழ்ஹிய்யா -ஹஜ் பெருநாள் அன்று அறுக்கப்படுகின்ற குர்பானி பிராணியின் நிபந்தனைகளும் ஒன்றுதான்.

அவை பின்வருமாறு:

1). ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய கால்நடைகளைத்தான் குர்பானி கொடுக்க முடியும்.

2). குர்பானியை நிறைவேற்றுவதற்கு தடையாக இருக்கின்ற குறைகளை விட்டு நீங்கி இருக்க வேண்டும். உதாரணமாக: நோயுற்று இருப்பது, கண் குருடாக இருப்பது, நொண்டியாக இருப்பது, மிகவும் மெலிந்து இருப்பது.

3). மார்க்கம் நிர்ணயித்த வயதை குர்பானி பிராணி அடைந்திருக்க வேண்டும். ஒட்டகத்திற்கு ஐந்து வயது முழுமை அடைந்திருக்க வேண்டும். மாடாக இருந்தால் இரண்டு ஆண்டுகள் பூர்த்தியாகி இருக்க வேண்டும். நாட்டு ஆடாக இருந்தால் ஓர் ஆண்டு நிறைவடைந்திருக்க வேண்டும். செம்மறி ஆடாக இருந்தால் ஆறு மாதங்கள் பூர்த்தியாகி இருக்க வேண்டும்.

.........................................

நான்காவது பாடம்

# ஹஜ் மற்றும் உம்ரா உடைய செயல் முறை

ஹஜ்ஜுடைய செயல் முறையை விளக்கும்போது அதற்கு அடிப்படை ஆதாரமாக ஜாபிர் ﵁ அவர்கள் அறிவிக்கின்ற நபிமொழியைத்தான் அறிஞர்கள் எடுக்கின்றார்கள்.

நபி ﷺ அவர்கள் உடைய ஹஜ்ஜைப் பற்றி வந்துள்ள ஸஹீஹான, ஆதாரப்பூர்வமான நபிமொழிகள் பலவற்றை நாம் ஆய்வு செய்தபோது நமக்கு கிடைத்த செயல் முறை விளக்கத்தை சுருக்கமாக இங்கு குறிப்பிடுகின்றோம்.

1). ஹஜ் அல்லது உம்ராவை நாடி பயணம் செய்பவர் மீக்காத்தை அடைந்தவுடன் அங்கு அவர் குளிக்க வேண்டும்.

2). உடலில் களைய வேண்டிய முடிகளை களைந்துவிட வேண்டும். உதாரணமாக, மீசையைக் குறைப்பது, அக்குள் இன்னும் மர்மஸ்தானத்தின் முடியை நீக்குவது.

3). நகங்களை வெட்ட வேண்டும்.

4). இஹ்ராம் உடைய நிய்யத் வைப்பதற்கு முன்னர் உடலில் நறுமணம் பூசுவது.

5). ஆண்கள், இஹ்ராமிற்காக அணிகின்ற கீழாடையும் போர்வையும் தைக்கப்படாததாகவும் வெள்ளை நிறமுடையதாகவும், சுத்தமானதாகவும் இருக்க வேண்டும். பெண்கள் தங்களுக்கு பொருத்தமான ஆடைகள் எதை வேண்டுமானாலும் அணியலாம்.

6). ஆண்கள் தங்கள் போர்வையால் இரண்டு புஜங்களையும் மறைக்க வேண்டும்.

7). தான் எந்த ஹஜ்ஜை நிறைவேற்ற நினைக்கின்றாரோ (கிரான்,

இஃஃப்ராத், தமத்துஃ) அதைக் கூறி நிய்யத் செய்து தல்பியா கூறவேண்டும். உம்ராவாக இருந்தால் அதைக் கூறி தல்பியா கூற வேண்டும்.

8). இஹ்ராம் கட்டுபவர் தனது பாதையில் (நோய், அல்லது ஆபத்து போன்ற) ஏதும் குறிக்கீடுகள் ஏற்பட்டு, தனது புனித பயணம் தடைப்படும் என்று பயந்தால், நிய்யத் செய்த பின்னர்

مَحِلِّي حَيْثُ حَبَسْتَنِي

என்னை நீ எங்கு தடுப்பாயோ அதுதான் நான் இஹ்ராமை முடிக்கின்ற இடம் என்று இதையும் கூறுவது அவசியமாகும்.

9). முதன் முதலில் நிய்யத் வைக்கும்போது கிப்லாவை முன்னோக்கியவராக சொல்வது விரும்பத்தக்கதாகும்.

10). தல்பியாவை ஆரம்பிக்கும் முன்பாக,

اَللّٰهُمَّ هٰذِهِ حَجَّةٌ لَا رِيَاءَ فِيهَا وَلا سُمْعَةَ

அல்லாஹ்வே இது ஹஜ் ஆகும். இதில் நான் முகஸ்துதியையோ புகழ்ச்சியையோ நாடவில்லை.

உம்ராவாக இருந்தால்,

اَللّٰهُمَّ هٰذِهِ عُمْرَةٌ لَا رِيَاءَ فِيهَا وَلَا سُمْعَةَ

அல்லாஹ்வே இது உம்ரா ஆகும். இதில் நான் முகஸ்துதியையோ புகழ்ச்சியையோ நாடவில்லை.

11). பிறகு, தல்பியா கூற வேண்டும்.

لَبَّيْكَ اَللّٰهُمَّ لَبَّيْكَ لَبَّيْكَ لَا شَرِيكَ لَكَ لَبَّيْكَ إِنَّ الْحَمْدَ وَالنِّعْمَةَ لَكَ وَالْمُلْكَ لَا شَرِيكَ لَكَ

உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன். அல்லாஹ்வே! உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன். உன் அழைப்புக்குப் பதில் அளித்து விட்டேன். உனக்கு இணை துணை அறவே இல்லை. உன் அழைப்புக்கு பதில் அளித்து விட்டேன். நிச்சயமாக புகழ், அருட்கொடை மற்றும் ஆட்சி ஆகிய அனைத்தும் உனக்கு சொந்தமானவை. உனக்கு இணை துணை அறவே இல்லை.

12).நபித்தோழர்கள் இந்த தல்பியாவுடன் மேலும் சில வார்த்தைகளை சேர்த்து கூறுவார்கள்.

لَبَّيْكَ ذَا الْمَعَارِجِ وَلَبَّيْكَ ذَا الْفَوَاضِلِ

உயர்வுகளை உடையவனே! உன்னிடம் நான் ஆஜராகிவிட்டேன். சிறப்புகளை உடையவனே! உன்னிடம் நான் ஆஜராகிவிட்டேன்.



13). உயர்ந்த குரலில் தல்பியா கூறவேண்டும்.

14). மக்காவிற்கு சென்றவுடன் உம்ராவை நிறைவேற்ற செல்லும்முன் குளிப்பது முஸ்தஹப் -விரும்பத்தக்கது ஆகும்.

15). ஆண்கள் தவாஃபை ஆரம்பிக்கும் முன்பாக தனது மேல் உள்ள இஹ்ராமுடைய ஆடையை வலது புஜம் தெரியும்படி போர்த்த வேண்டும்.

16). தவாஃ செய்பவர் உளூவுடன் இருக்கவேண்டும் என்பது நிபந்தனையாகும்.

17). பிறகு, அல் ஹஜருல் அஸ்வதை -கருப்புக் கல்லை கையினால் தொடவேண்டும். வாய் வைத்து முத்தமிட வேண்டும். இது முஸ்தஹப் ஆகும். இது முடியவில்லை என்றால், கையினால் தொட மட்டும் செய்யவேண்டும். பிறகு, அந்த கையை முத்தமிட வேண்டும். கையினால் தொடவும் முடியவில்லை என்றால் அதை நோக்கி கையினால் ஜாடை செய்ய வேண்டும். ஆனால், கையை முத்தமிடக் கூடாது. இவ்வாறு, தவாஃப் உடைய

ஒவ்வொரு சுற்றிலும் அல்ஹஜருல் அஸ்வத்தை கடக்கும்போது செய்ய வேண்டும்.

18). அல்ஹஜருல் அஸ்வதிலிருந்து தவாஃபை ஆரம்பிக்கும்போதும் ஒவ்வொரு முறை அந்த இடத்திற்கு வரும்போதும் அல்லாஹு அக்பர் என்று தக்பீர் கூற வேண்டும்.

19). தவாஃப் உடைய முதல் சுற்றின் ஆரம்பத்தில் மட்டும்

بِسْمِ اللهِ وَاللهُ أَكْبَرُ

பிஸ்மில்லாஹ் வல்லாஹு அக்பர் என்று கூறுவது முஸ்தஹப் ஆகும்.

20). கஃபாவின் அர்ருக்னுல் யமானி என்ற மூலையை அடையும்போது முடிந்தால் அதை கையினால் தொடுவது முஸ்தஹப் ஆகும். ஆனால், அதை முத்தமிடக்கூடாது. அப்படி அதை தொடவும் முடியவில்லை என்றால் கையினால் சாடை செய்யக்கூடாது. அவ்வாறே, அர்ருக்னுல் யமானியை கடக்கும்போது தக்பீர் சொல்லவும் கூடாது.

21). அர்ருக்னுல் யமானி மற்றும் அல்ஹஜருல் அஸ்வத் ஆகிய இரண்டு மூலைகளுக்கு இடையில் பின்வருகின்ற துஆவை ஓத வேண்டும். இது முஸ்தஹப் ஆகும்.

رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ

எங்கள் இறைவா! எங்களுக்கு இம்மையிலும் அழகியதைத் தா! மறுமையிலும் அழகியதைத் தா! (நரக) நெருப்பின் வேதனையில் இருந்தும் எங்களைக் காத்துக்கொள்! (அல்குர்ஆன் 2:201)

22). இந்த இரண்டு மூலைகள் அல்லாத மற்ற இடங்களில் தவாஃப் சுற்றும்போது வேறு துஆக்கள் எதுவேண்டுமானாலும் கேட்கலாம்.

23). உம்ராவுடைய தவாஃபிலும் ஹஜ்ஜு கிரான் உடைய முதல் தவாஃபிலும் முதல் மூன்று சுற்றுகளில் மட்டும் ரமல் செய்ய வேண்டும். ரமல் என்றால் சாதரணமான நடை மற்றும் விரைந்து ஓடுதல் ஆகிய இரண்டுக்கும் இடையில் உள்ள ஒருவகையான நடுத்தரமான நடை ஆகும். மற்ற நான்கு சுற்றுகளில் சாதாரணமாக நடந்து தவாஃப் செய்ய வேண்டும்.

24). ஏழு சுற்றுகள் முழுமையாக முடிந்தவுடன் தனது வலது புஜத்தை மறைக்க வேண்டும்.

25). பிறகு, மகாம் இப்ராஹீம் நோக்கி செல்ல வேண்டும். அங்கு பின்வரும் குர்ஆன் வசனத்தை ஓத வேண்டும்.

وَاتَّخِذُوا مِنْ مَقَامِ إِبْرَاهِيمَ مُصَلًّى

(அதில்) இப்ராஹீம் நின்ற இடத்தில் நீங்கள் தொழுமிடத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். (அல்குர்ஆன் 2:125)

26). பிறகு, இரண்டு ரக்அத்துகள் மகாம் இப்ராஹீமுக்கு பின்னால் தொழ வேண்டும்.

27). அதில், முதல் ரக்அத்தில் ஃபாத்திஹா சூராவிற்குப் பின்னர் சூரா அல்காஃபிரூன் (குல் யா அய்யுஹல் காஃபிரூன்) ஓத வேண்டும். இரண்டாவது ரக்அத்தில் ஃபாத்திஹா சூராவிற்குப் பின்னர் சூரா அல்இக்லாஸ் (குல் ஹுவல்லாஹு அஹது) ஓத வேண்டும்.

28). இந்த இரண்டு ரக்அத்துகளை மகாம் இப்ராஹீமுக்கு பின்னால் தொழ முடியவில்லை என்றால் மஸ்ஜிதுல் ஹராமில் வேறு எந்த இடத்தில் வேண்டுமானாலும் நிறைவேற்றலாம்.

29). இந்த முதல் தவாஃபை கிரான் மற்றும் இஃப்ராத் ஹஜ்ஜில் தவாஃபுல் குதூம் என்று கூறப்படும். ஹஜ் தமத்துஃ மற்றும்

உம்ராவில் இந்த முதல் தவாஃபை தவாஃபுல் உம்ரா என்று கூறப்படும்.

30). பிறகு, ஸம்ஸம் நீர் அருந்த வேண்டும்.தனது தலையின் மீது கொஞ்சம் ஸம்ஸம் நீர் ஊற்ற வேண்டும். பிறகு, ‘அல்ஹஜருல் அஸ்வத்’க்கு வந்து அதை முத்தமிட வேண்டும். அல்லது வலது கையால் தொட வேண்டும்.

31). பிறகு, ஸஃபா மலை நோக்கி நடக்க வேண்டும்.

32). அங்கு சென்றவுடன் பின்வருகின்ற வசனத்தை ஓத வேண்டும்.

إِنَّ الصَّفَا وَالْمَرْوَةَ مِنْ شَعَائِرِ اللّٰهِ

நிச்சயமாக ஸஃபா, மர்வா (மலைகள்) அல்லாஹ்வின் அடையாளங்களில் உள்ளவை. (அல்குர்ஆன் 2:158)

பிறகு,

أَبْدَأُ بِمَا بَدَأَ اللّٰهُ بِهِ

“அப்தவு பிமா பதஅல்லாஹு பிஹி” என்று கூறவேண்டும்.

பொருள்: அல்லாஹ் ஆரம்பித்ததைக் கொண்டு நானும் ஆரம்பிக்கிறேன்.

33). ஸஃபா மலையிலிருந்து கஅபத்துல்லாஹ்வை பார்க்க முடிகின்ற அளவு அந்த மலையின் மீது ஏற வேண்டும். பிறகு, கிப்லாவை முன்னோக்கி, தனது இரு கைகளையும் உயர்த்தி மூன்று முறை தக்பீர் கூற வேண்டும்.

اَللّٰهُ أَكْبَرُ اللّٰهُ أَكْبَرُ اللّٰهُ أَكْبَرُ

34). பிறகு, பின்வருகின்ற திக்ருகளை மூன்று முறை கூற வேண்டும்.

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ

لَا إِلٰهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ أَنْجَزَ وَعْدَهُ وَنَصَرَ عَبْدَهُ
وَهَزَمَ الْأَحْزَابَ وَحْدَهُ

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையே இல்லை; ஆட்சி அவனுக்கே உரியது; புகழும் அவனுக்கே உரியது; அவன்தான் உயிர் தருகிறான்; மரணத்தையும் தருகிறான்; அவன் எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றல் உடையவன்.

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்; அவன் தன் வாக்கை நிறைவேற்றினான்; தன் அடிமைக்கு உதவினான்; தனியாகவே (காஃபிர்) இராணுவங்களைத் தோற்கடித்தான்.



35). மேற்கூறப்பட்ட திக்ருகளை ஒவ்வொருமுறை கூறியவுடன் நீண்ட நேரம் துஆ கேட்கவேண்டும். இவ்வாறு ஒரு முறைக்கும் அடுத்த முறைக்கும் இடையில் நீண்ட நேரம் துஆ கேட்க வேண்டும். மூன்றாவது முறை திக்ர் ஓதி, துஆ கேட்டவுடன் அங்கிருந்து மர்வா நோக்கி நடக்க வேண்டும்.

36). பச்சை விளக்கினால் அடையாளம் இடப்பட்ட இடத்தில் மட்டும் ஆண்கள் வேகமாக விரைந்து ஓட வேண்டும். பெண்கள் அமைதியாக கடந்து செல்வார்கள்.

37). பிறகு, மர்வா மலை வந்தவுடன் முடிந்தளவு அதில் ஏறி ஸஃபா மலையில் செய்ததைப் போன்று அங்கும் செய்ய வேண்டும்.

38). இவ்வாறு ஸஃபாவிலிருந்து மர்வா வரை செல்வது ஒரு சுற்றாக எடுத்துக்கொள்ளப்படும்.

39). பிறகு, மர்வாவிலிருந்து ஸஃபா நோக்கி வர வேண்டும்.

40). பச்சை விளக்குகளால் அடையாளமிடப்பட்ட இடம் வந்தவுடன் ஆண்கள் மட்டும் வேகமாக, விரைந்து ஓட வேண்டும்.

41). பிறகு, ஸஃபா மலை வந்தவுடன் அதில் ஏறி நின்று இரு கைகளையும் உயர்த்தி, 34 வது எண்ணில் கூறப்பட்ட திக்ருகளை மூன்று முறை கூறவேண்டும். ஒவ்வொரு முறை கூறியவுடன் நீண்ட நேரம் துஆ கேட்க வேண்டும். மூன்றாவது முறை திக்ருக்குப் பிறகு துஆ கேட்டவுடன் இறங்கி மர்வா நோக்கி நடக்க வேண்டும். இத்துடன் இரண்டாவது சுற்று நிறைவடையும்.

42). இவ்வாறு ஒவ்வொரு சுற்றுகளையும் நிறைவு செய்ய வேண்டும். இறுதியாக ஏழாவது சுற்று மர்வாவில் நிறைவு செய்யப்படும்.[37]

43). ஹஜ் இஃப்ராத் அல்லது ஹஜ் கிரான் செய்பவர் இந்த ஸஃயை செய்த பின்னர் இஹ்ராமை முடித்துவிடக்கூடாது. மாறாக, ஹஜ்ஜுடைய அமல்கள் முடிகின்றவரை அவர்கள் இஹ்ராமில்தான் இருக்க வேண்டும். தடுக்கப்பட்ட செயல்கள் எதையும் செய்யக்கூடாது.

44). ஹஜ் தமத்துஃ செய்பவர் இந்த ஸஃயை முடித்தவுடன் தனது தலை முடியை குறைக்க வேண்டும். பிறகு, இஹ்ராமை விட்டு வெளியேறிவிடுவார். இஹ்ராமுடைய நிலையில் தடுக்கப்பட்ட எல்லாம் அவருக்கு இப்போது அனுமதிக்கப்பட்டுவிடும்.

45). ஹஜ் தமத்துஃ செய்பவர் துல்ஹஜ் பிறை எட்டு வந்தவுடன்

---

37. ஸஃபா மர்வா மலைகளுக்கிடையில் ஸயீ செய்யும்போது குறிப்பிட்ட திக்ருகள், துஆககள் ஏதும் இல்லை. விரும்பிய திக்ருகள் அல்லது துஆக்களை செய்யலாம். நபித் தோழர்கள் பலர் பின்வரும் துஆவை செய்ததாக ஸஹீஹான அறிவிப்புகளில் காணப்படுகின்றது.

رَبِّ اغْفِرْ وَارْحَمْ؛ إِنَّكَ أَنْتَ الْأَعَزُّ الْأَكْرَمُ

என் இறைவா! மன்னிப்பாயாக! கருணை புரிவாயாக! நீதான் மிக மிக கண்ணியத்திற்குரியவன். மிக மிக தயாளமாணவன் (ஆதாரம்: அல்பானி அவர்களின் மனாஸிக்குல் ஹஜ் வல் உம்ரா.)

மீண்டும் இஹ்ராம் கட்ட வேண்டும். தான் எந்த இடத்தில் தங்கி இருக்கின்றாரோ அங்கிருந்தே அவர் இஹ்ராம் கட்ட வேண்டும். அவ்வாறே அதுவரை இஹ்ராம் கட்டாமல் இருந்த எல்லோரும் அவர்கள் ஹரம் எல்லைக்குள் எங்கு இருக்கின்றார்களோ அங்கிருந்தே இஹ்ராம் கட்ட வேண்டும். மக்காவில் இருந்தால் மக்காவிலிருந்து இஹ்ராம் கட்ட வேண்டும். மக்காவிற்கு வெளியில் இருந்தால் அங்கிருந்தே இஹ்ராம் கட்ட வேண்டும்.

46). முதல்முறை இஹ்ராம் கட்டுவதற்கு முன்பு செய்தவாறு இப்போதும் செய்ய வேண்டும். அதாவது, குளிப்பது, உடலில் நறுமணம் பூசுவது, சுத்தமான ஆடைகளை இஹ்ராமுக்காக தேர்வு செய்வது.

47). ஹஜ் செய்ய வந்துள்ள எல்லோரும் இஹ்ராம் அணிந்தவர்களாக, தல்பியா கூறியவர்களாக மினா நோக்கி செல்ல வேண்டும்.

48). ளுஹ்ர் தொழுகைக்கு முன்பு மினா சென்று அங்கு தங்க வேண்டும். பிறகு, அங்கு ளுஹ்ர், அஸ்ர், மக்ரிப், இஷா, ஸுப்ஹ் தொழுகைகளை தொழவேண்டும். ஒரு தொழுகையை மற்ற தொழுகையுடன் சேர்த்து தொழாமல் அதற்குரிய நேரத்தில் தொழவேண்டும். நான்கு ரக்அத்துகளுடைய தொழுகையை மட்டும் சுருக்கி இரண்டு ரக்அத்துகளாக நிறைவேற்ற வேண்டும்.

49). பிறகு, பிறை ஒன்பதுடைய பகல் விடிந்தவுடன் அரஃபா மைதானம் நோக்கி ஹாஜி புறப்படுவார்.

50). முடிந்தால் நமிரா என்ற இடத்தில் பகலின் நடுப்பொழுதுவரை தங்கி இருப்பது சிறப்பாகும். நமிரா என்பது அரஃபா மைதானத்திற்கு முன்பாக இருக்கின்ற ஒரு இடமாகும்.

51). அந்த நமிரா என்ற இடத்தில் முஸ்லிம்களின் மன்னரோ அல்லது அவரின் பிரதிநிதியோ சிறிய ஒரு பிரசங்கம் செய்வார். அதற்கு பிறகு, ளுஹ்ர் மற்றும் அஸ்ர் தொழுகையை ளுஹ்ர்

உடைய நேரத்தில் (கஸ்ர் செய்து) சுருக்கி தொழவைப்பார். (பிரசங்கம் நிகழ்த்த மன்னர் அல்லது மன்னரின் பிரதிநிதி இல்லையென்றால் அல்லது அந்த இடம் வரை செல்வது மிக சிரமமாக இருந்தால் குழுக்களாக வந்தவர்களில் உள்ள அறிஞர் ஒருவர் இதை செய்யலாம். அப்படி பிரசங்கம் நிகழ்த்தவில்லை என்றாலும் தொழுகையை ஜமாஅத்தாக ஹாஜிகள் நிறைவேற்றுவார்கள். ளுஹ்ரையும் அஸ்ரையும் ளுஹ்ர் உடைய நேரத்தில் நிறைவேற்றுவார்கள். முதலில் அதான் கூறுவார்கள். பிறகு, இகாமத் கூறுவார்கள். ளுஹ்ரை இரண்டு ரக்அத்துகளாக நிறைவேற்றுவார்கள். பிறகு இகாமத் கூறி, அஸ்ரை இரண்டு ரக்அத்துகளாக நிறைவேற்றுவார்கள்.

52). பிறகு, அரஃபா மைதானத்திற்குள் ஹாஜி நுழைவார். தான் அரஃபா எல்லைக்குள்தான் இருக்கின்றோம் என்பதை ஹாஜி உறுதி செய்துகொள்ள வேண்டும்.

53). கிப்லாவை முன்னோக்கி நிற்க வேண்டும்.

54). தனது இரு கரங்களையும் உயர்த்தி அதிகம் துஆ கேட்க வேண்டும். தல்பியா கூற வேண்டும். அல்லாஹ்வை புகழ வேண்டும். அதிகம் அதிகம் அல்லாஹ்வை நினைவுகூர வேண்டும். பணிந்து பயந்து துஆக்கள் கேட்க வேண்டும்.

55). அன்றைய தினம் கூறப்படுகின்ற திக்ர்களில் மிக சிறந்தது என்று பின்வருகின்ற திக்ரை நபி ﷺ அவர்கள் கூறி இருக்கின்றார்கள்.

لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ
وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணையே இல்லை; ஆட்சி அவனுக்கே உரியது; புகழும் அவனுக்கே உரியது; அவன்தான் உயிர்

தருகிறான்; மரணத்தையும் தருகிறான்; அவன் எல்லாப் பொருட்கள் மீதும் பேராற்றல் உடையவன்.

56). அன்றைய தினம் ஹாஜிகள் நோன்பில்லாமல் இருக்க வேண்டும். நோன்பில்லாமல் இருப்பது இபாதத்தில் அதிகம் சிரமம் எடுப்பதற்கு உதவியாக இருக்கும்.

57). நின்றவராக, பணிந்தவராக, பயந்தவராக, தாழ்மையுடன் அல்லாஹ்விடம் துஆ கேட்க வேண்டும். இவ்வாறு சூரியன் மறைகின்றவரை இருக்க வேண்டும்.

58). சூரியன் மறைந்தவுடன் அரஃபாவிலிருந்து புறப்பட்டு முஸ்தலிஃபா செல்ல வேண்டும்.

59). அமைதியாக செல்ல வேண்டும். தல்பியா கூறிய வண்ணம் செல்ல வேண்டும்.

60). முஸ்தலிஃபா சென்றவுடன் அங்கு மஃரிபையும் இஷாவையும் சேர்த்து இஷா உடைய நேரத்தில் நிறைவேற்ற வேண்டும். அதான் கூறி, இகாமத் கூறி மஃரிபை மூன்று ரக்அத்துகளாக நிறைவேற்ற வேண்டும். பிறகு, இகாமத் கூறி இஷாவை சுருக்கி, இரண்டு ரக்அத்துகளாக நிறைவேற்ற வேண்டும். (*பிறகு வித்ரை தொழுதுவிட்டு ஓய்வு எடுக்க வேண்டும்.)

61). பலவீனமானவர்கள் முஸ்தலிஃபாவிலிருந்து இரவிலேயே புறப்பட்டு மினா செல்வதற்கு நபி ﷺ அவர்கள் அனுமதி அளித்துள்ளார்கள். உடல் வலிமை உள்ளவர்கள் முஸ்தலிஃபாவில் இரவு முழுவதும் தங்கி இருப்பார்கள்.

62). முஸ்தலிஃபாவில் தங்கி இருந்து ஸுப்ஹ் தொழுகையை நிறைவேற்றுவார்கள்.

63). பிறகு, கிப்லாவை முன்னோக்கி நின்று, அல்லாஹ்வை புகழ வேண்டும். தக்பீர் கூறவேண்டும். லா இலாஹ இல்லல்லாஹ்

கூறவேண்டும். துஆ கேட்க வேண்டும். இவ்வாறு காலை வெளிச்சம் வெளிப்படுகின்றவரை நீடித்து இருக்க வேண்டும்.

64). சூரியன் உதயமாவதற்கு முன்பாக முஸ்தலிஃபாவிலிருந்து புறப்பட வேண்டும்.

65). அமைதியாக மினா நோக்கி செல்ல வேண்டும். தல்பியா கூறிய வண்ணம் செல்ல வேண்டும்.

66). மினா நோக்கி செல்கின்ற வழியில் ஏழு பொடிக் கற்களை பொறுக்கிக் கொள்ள வேண்டும்.

67). இறுதியாக, மினா வந்தவுடன் ஜம்ரத்துல் அகபாவிற்கு செல்ல வேண்டும். தல்பியாவை நிறுத்திவிட்டு, ஜம்ராவில் ஏழு கற்களை ஒவ்வொன்றாக எறியவேண்டும். ஒவ்வொரு கல்லை எறியும்போதும் தக்பீர் கூறவேண்டும். (அல்லது ஏழு கற்களை எறிந்தவுடன் தல்பியாவை நிறுத்த வேண்டும்.)

68). பிறகு, தனது குர்பானி பிராணியை அறுக்க வேண்டும். ஹாஜி, தான் அறுத்த குர்பானியின் மாமிசத்திலிருந்து உண்பது முஸ்தஹப் ஆகும்.

69). பிறகு, தனது தலை முடியை சிரைக்க வேண்டும். (பெண்கள் தங்களது முடியில் விரலின் நுணி அளவு வெட்டிக்கொள்ள வேண்டும்.)

70). பிறகு, தவாஃபுல் இஃபாழா செய்ய வேண்டும். இந்த தவாஃபை ஹாஜிகள் அனைவரும் செய்ய வேண்டும். அதாவது ஹஜ் இஃப்ராத் செய்பவர், ஹஜ் கிரான், மற்றும் ஹஜ் தமத்துஃ செய்யக்கூடிய அனைவரும் இந்த தவாஃபை செய்ய வேண்டும். இந்த தவாஃபிற்கு தவாஃபுஸ் ஸியாரா, தவாஃபுல் ஃபர்ழ் என்றும் கூறப்படும்.

71). பிறகு ஸஃபா மற்றும் மர்வா மலைகளுக்கு இடையில் ஸஃயி செய்ய வேண்டும். இதை ஹஜ் தமத்துஃ செய்பவர் கண்டிப்பாக செய்ய வேண்டும்.

72). ஹஜ் இஃப்ராத் செய்பவர் அல்லது ஹஜ் கிரான் செய்பவர் இதற்கு முன்பு தவாஃபுல் குதூம் செய்த பின்னர் ஸஃயி செய்திருந்தால் அவர்கள் இப்போது ஸஃயி செய்ய மாட்டார்கள்.

73). சுன்னா -நபிவழி என்னவென்றால் மேற்கூறப்பட்ட அமல்களை மேற்கூறப்பட்ட வரிசை முறைப்படி செய்வதாகும். அதாவது கல் எறிவது, குர்பானி கொடுப்பது, முடிகளை சிரைப்பது அல்லது குறைப்பது, தவாஃப் செய்வது.

74). மேற்கூறப்பட்ட வரிசைக்கு மாற்றமாக இந்த நான்கு அமல்களில் ஒன்றை மற்றொன்றை விட முற்படுத்தினால் அல்லது பிற்படுத்தினால் அது குற்றமாகாது.

75). கல் எறிவது, முடி இறக்குவது அல்லது குறைப்பது, தவாஃப் மற்றும் ஸஃயி இந்த மூன்று அமல்களில் இரண்டை செய்துவிட்டால் அவர் தனது இஹ்ராமை விட்டு வெளியேறிவிடலாம். முதல் தஹல்லுல் அவருக்கு ஏற்பட்டுவிடும். இஹ்ராமில் தடுக்கப்பட்ட அனைத்தும் அவருக்கு ஆகுமாகிவிடும். மனைவியுடன் சேர்வது மட்டும் தடுக்கப்பட்டதாக இருக்கும். இந்த மூன்று அமல்களையும் செய்து முடித்துவிட்டால் மனைவியுடன் சேர்வதும் அவருக்கு ஆகுமாகிவிடும். முழுமையான பெரிய தஹல்லுல் ஏற்பட்டுவிடும். (அதாவது, இஹ்ராமுடைய கட்டுப்பாட்டை விட்டு முழுமையாக வெளியேறிவிடுவார். இஹ்ராமின் காரணமாக தடுக்கப்பட்டவையாக இருந்த செயல்கள் எல்லாம் இவருக்கு இப்போது அனுமதிக்கப்பட்டதாக ஆகிவிடும்.)

76). பிறகு, பிறை பதினொன்று, பன்னிரெண்டு ஆகிய நாள்களில் மினாவில்தான் ஹாஜிகள் இரவு தங்கவேண்டும். இந்த இரண்டு நாள்கள் மினாவில் தங்குவது கட்டாயமாகும். பிறை பதினொன்று மற்றும் பன்னிரெண்டு உடைய பகலில் மினாவுடைய மூன்று ஜம்ராக்களிலும் கற்கள் எறியவேண்டும்.

77). முதலில் சிறிய ஜம்ராவில் கல் எறிய வேண்டும். இரண்டாவது நடு

ஜம்ராவில் கல் எறிய வேண்டும். இறுதியாக பெரிய ஜம்ராவில் கல் எறிய வேண்டும்.

78) பிறை பன்னிரெண்டிலும் இவ்வாறுதான் எறிய வேண்டும்.

79) பிறை பதிமூன்றில் தங்கினால் அன்றும் இப்படித்தான் கல் எறிய வேண்டும்.

80) இந்த மூன்று நாள்களிலும் கல் எறிவதுடைய நேரம் சூரியன் நடுப்பொழுதிலிருந்து சாய்ந்த பின்னர் ஆரம்பமாகும். அடுத்த நாள் ஃபஜ்ருடைய நேரம் வரை கல் எறிவதுடைய கால அளவு நீடித்து இருக்கும்.

81) சிறிய ஜம்ராவில் கல் எறிந்தவுடன் வலது பக்கமாக கொஞ்சம் முன் சென்று கிப்லாவை முன்னோக்கி நிற்க வேண்டும். தனது இரு கரங்களையும் உயர்த்தி நீண்ட நேரம் துஆவில் ஈடுபட வேண்டும்.

82) நடு ஜம்ராவில் கல் எறிந்த பின்னர் இடது பக்கமாக கொஞ்சம் முன் சென்று கிப்லாவை முன்னோக்கி நின்று கைகளை உயர்த்தி நீண்ட நேரம் துஆவில் ஈடுபட வேண்டும்.

83) கடைசி ஜம்ராவான ஜம்ரத்துல் அகபாவில் கல் எறிந்தவுடன் அங்கு நிற்காமல் திரும்பிவிட வேண்டும்.

84) ஒருவர் பிறை பதிமூன்றில் தங்கியிருப்பதை நாடவில்லை என்றால் பிறை பன்னிரெண்டில் கல் எறிந்துவிட்டு அன்று மாலை சூரியன் மறைவதற்கு முன்னர் மினாவிலிருந்து கண்டிப்பாக வெளியேறிவிட வேண்டும்.

85) அவர் விருப்பத்துடன் மினாவில் தங்கி இருக்கும்போது சூரியன் மறைந்துவிட்டால் கண்டிப்பாக அன்று இரவு மினாவில் தங்கியிருந்து பதிமூன்று பகலில் மூன்று ஜம்ராக்களிலும் கற்கள் எறிந்துவிட்டுத்தான் அவர் மினாவிலிருந்து புறப்பட வேண்டும்.

86) பிறகு மக்காவிலிருந்து அவர் ஊர் திரும்ப நாடினால் இறுதியாக தவாஃபுல் விதாஃ என்ற விடைபெறுகின்ற தவாஃபை நிறைவேற்றிவிட்டு புறப்பட வேண்டும்.

87) ஹைழ் அல்லது நிஃபாஸ் உடைய நிலையில் இருக்கின்ற பெண்கள் மீது இந்த இறுதி தவாஃப் கடமை இல்லை. அவர்கள் இதை செய்யாமலும் புறப்படுவது அவர்கள் மீது குற்றமாகாது.

.....................................................

ஐந்தாவது பாடம்

# ஸியாரத்துல் மதீனா

மதீனாவிற்கு செல்வது

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன.

**முதல் சட்டவிளக்கம்**

## ஸியாரத்துல் மஸ்ஜிதின் நபவி

ஸியாரத்துல் மஸ்ஜிதின் நபவி -நபி அவர்களுடைய மஸ்ஜிதுக்கு செல்வது. மதீனாவில் உள்ள நபி ﷺ அவர்களின் மஸ்ஜிதுக்கு சென்று தொழுவது, வணக்க வழிபாடுகள் செய்வது மார்க்கத்தில் விரும்பத்தக்க அமலாகும்.

ஆண்டில் எந்த நேரத்தில் வேண்டுமானாலும் அங்கு செல்லலாம். அதற்காக குறிப்பிட்ட நேரம், காலம் ஏதும் இல்லை. ஹஜ்ஜுக்கு முன்பும் அங்கு செல்லலாம். அல்லது ஹஜ்ஜுக்கு பிறகும் அங்கு செல்லலாம்.

ஹஜ்ஜுக்கு செல்வதில் மஸ்ஜிது நபவிக்கு செல்வது உள்ளடங்காது. இரண்டும் தனிப்பட்ட அமல்களாகும். மஸ்ஜிது நபவிக்கு செல்வது ஹஜ்ஜுடைய வாஜிபுகளில் உள்ளதும் அல்ல. அல்லது அதன் நிபந்தனைகளில் உள்ளதும் அல்ல. எனினும் யார் ஹஜ்ஜுக்காக வருவாரோ அவர் மதீனா சென்று மஸ்ஜிது நபவியில் தொழுவது பொருத்தமான ஒரு காரியமாகும். ஆகவே, தனது வசதிக்கு ஏற்ப அவர் ஹஜ்ஜுக்கு முன்பு அல்லது ஹஜ்ஜுக்கு பின்பு மதீனா செல்லலாம். குறிப்பாக தொலைதூர நாடுகளில் இருந்து வருகின்ற ஹாஜிகள் ஹஜ்ஜுக்கு வருகின்ற இந்த வாய்ப்பை பயன்படுத்தி மஸ்ஜிது நபவிக்கும் சென்று தொழுதுவிடுவது அவர்களுக்கு மீண்டும் ஒரு பயணத்தின் சிரமம் ஏற்படுவதை தவிர்த்துவிடும்.

இங்கு ஒன்றை தெளிவாக விளங்கிக்கொள்ள வேண்டும்.

மஸ்ஜிது நபவிக்கு செல்வது ஹஜ்ஜுடைய வாஜிபுகள் அல்லது நிபந்தனைகளில் உள்ளது அல்ல. ஆகவே, அங்கு செல்லாமல் ஒருவர் ஹஜ்ஜை முடித்து ஊருக்கு திரும்பிவிட்டால் அவர் மீது குற்றமில்லை. ஹஜ்ஜுடைய நன்மைகளில் ஏதும் அவருக்கு குறைந்து விடாது. ஹஜ்ஜுக்கும் மஸ்ஜிது நபவி செல்வதற்கும் அறவே எவ்வித சம்பந்தமும் இல்லை.

மஸ்ஜிது நபவி செல்வதற்கும் அங்கு தொழுவதற்கும் நபிமொழிகளில் பல சிறப்புகள் வந்துள்ளன.

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه عَنِ النَّبِيِّ ﷺ قَالَ لَا تُشَدُّ الرِّحَالُ إِلَّا إِلَى ثَلَاثَةِ مَسَاجِدَ الْمَسْجِدِ الْحَرَامِ وَمَسْجِدِ الرَّسُولِ ﷺ وَمَسْجِدِ الْأَقْصٰى رواه البخاري برقم ١١١٥**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: மூன்று மஸ்ஜிதுகளுக்கே தவிர வேறு இடங்களுக்கு (நன்மையை நாடி) பயணம் மேற்கொள்ளக்கூடாது. 1). அல்மஸ்ஜிதுல் ஹராம். 2). ரஸூல் உடைய மஸ்ஜித். 3). மஸ்ஜிதுல் அக்ஸா.[38]

**عَنْ أَبِي هُرَيْرَةَ رضي الله عنه أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ صَلَاةٌ فِي مَسْجِدِي هٰذَا خَيْرٌ مِنْ أَلْفِ صَلَاةٍ فِيمَا سِوَاهُ إِلَّا الْمَسْجِدَ الْحَرَامَ رواه البخاري برقم ١١١٦**

நிச்சயமாக நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: எனது இந்த மஸ்ஜிதில் தொழப்படுகின்ற ஒரு தொழுகை அது அல்லாத வேறு மஸ்ஜிதில் தொழப்படுகின்ற ஆயிரம் தொழுகைகளை விட சிறந்ததாகும். ஆனால், அல்மஸ்ஜிதுல் ஹராமைத் தவிர.[39]

இந்த நபிமொழிகள் நமக்கு உணர்த்துவதாவது, நபி ﷺ அவர்களின் மஸ்ஜிதிற்கு நாம் செல்ல வேண்டும், அங்கு தொழவேண்டும், அங்கு

38. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1115
39. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 1116.

தொழுவதால் நன்மைகள் பன்மடங்காக பெருக்கப்படுகின்றன, மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர மற்ற இடங்களுக்கு நன்மையை நாடி பயணம் செல்லக் கூடாது.

மதீனாவிற்கு மஸ்ஜிது நபவியில் தொழுவதற்காக செல்வது ஆண்கள், பெண்கள் எல்லோருக்கும் மார்க்கம் அனுமதித்த ஓர் அமலாகும். மேற்கூறப்பட்ட ஆதாரங்கள் பொதுவாகத்தான் உள்ளன. ஆகவே, அவற்றில் ஆண்கள், பெண்கள் எல்லோரும் அடங்குவார்கள். பெண்கள் பயணம் செல்வதற்கு மார்க்கம் என்ன நிபந்தனை விதித்துள்ளதோ அதை கவனத்தில் வைக்க வேண்டும்.

**மஸ்ஜித் நபவியை ஸியாரத் செய்வதற்குரிய முறை:**

மஸ்ஜித் நபவி சென்றவுடன் அதில் நுழையும்போது வலது காலை வைத்து துஆ ஓதி உள்ளே நுழைய வேண்டும். பொதுவாக எல்லா மஸ்ஜிதுகளுக்கும் உள்ள துஆவைத்தான் ஓத வேண்டும். மஸ்ஜித் நபவிக்கு என்று தனிப்பட்ட திக்ருகளோ துஆக்களோ ஏதும் இல்லை.

**மஸ்ஜிதில் நுழைவதற்கான துஆ பின்வருமாறு:**

மஸ்ஜிது நபவிக்குள் நுழையும்போது வலது காலை உள்ளே வைத்து

أَعُوذُ بِاللّٰهِ الْعَظِيمِ وَبِوَجْهِهِ الْكَرِيْمِ وَسُلْطَانِهِ الْقَدِيْمِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيمِ
بِسْمِ اللّٰهِ وَالصَّلَاةُ وَالسَّلَامُ عَلَى رَسُولِ اللّٰهِ اَللّٰهُمَّ افْتَحْ لِي أَبْوَابَ رَحْمَتِكَ

என்று பிரார்த்திக்க வேண்டும்.

பொருள்: மகத்துவமிக்க அல்லாஹ்வைக் கொண்டும், சங்கைமிகு அவனது முகத்தைக் கொண்டும், நிலையான அவனது ஆட்சியைக் கொண்டும், விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டு பாதுகாவல் தேடுகிறேன். அல்லாஹ்வின் பெயரால்...! ஸலவாத்தும் ஸலாமும் அல்லாஹ்வின் தூதரின் மீது உண்டாகட்டும். அல்லாஹ்வே! உனது கருணையின் வாசல்களை எனக்குத் திற!

பிறகு, மஸ்ஜிதில் எங்கு இடம் கிடைக்கின்றதோ அங்கு இரண்டு ரக்அத்துகள் தொழவேண்டும். முடிந்தால் ரவ்ழா -சொர்க்கப் பூங்காவில் தொழுவது சிறப்பாகும்.

**عَنْ عَبْدِ اللهِ بْنِ زَيْدٍ الْمَازِنِيِّ ﵁ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَا بَيْنَ بَيْتِي وَمِنْبَرِي رَوْضَةٌ مِنْ رِيَاضِ الْجَنَّةِ رواه البخاري برقم ١١٢٠**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்; எனது வீட்டுக்கும் எனது மின்பருக்கும் மத்தியில் உள்ள இடம் சொர்க்க பூங்காக்களில் உள்ள ஒரு பூங்காவாகும்.[40]

மஸ்ஜிது நபவியை ஸியாரத் செய்வதற்காக மதீனா சென்றவர் ஐந்து நேரத் தொழுகைகளையும் அங்கு நிறைவேற்றுவதற்கு முயற்சிக்க வேண்டும். முடிந்தளவு மஸ்ஜிதில் தங்கி இருந்து குர்ஆன் ஓதுவது, திக்ர் செய்வது, நஃபில் தொழுவது போன்ற இபாதத்துகளில் ஈடுபட வேண்டும். முடிந்தால் இவற்றை ரவ்ழாவில் செய்வது மிக சிறப்பாகும். ஃபர்ழான தொழுகையின் நேரம் வந்துவிட்டால் ரவ்ழாவை விட்டு விட்டு முன் வரிசைகளுக்கு சென்றுவிட வேண்டும். இதுதான் மார்க்கம் ஆர்வமூட்டிய வழிமுறையாகும். தொழுகைக்கு வரிசை நிற்கும்போது ரவ்ழாவைவிட முன்வரிசைகளுக்குத்தான் முன்னுரிமை கொடுக்கப்படும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## நபி ﷺ அவர்களின் கப்ரை ஸியாரத் செய்வது

மஸ்ஜித் நபவியை ஸியாரத் செய்த பின்னர் நபி ﷺ அவர்களின் கப்ரையும் அவர்களின் இரு தோழர்கள் அபூபக்ர் ﵁ மற்றும் உமர் ﵁ அவர்களின் கப்ருகளையும் ஸியாரத் செய்வது விரும்பத்தக்க அமலாகும். பயணத்தின் அடிப்படை நோக்கம் இதுவாக இல்லை என்றாலும் மஸ்ஜிது நபவியை ஸியாரத் செய்த பின்னர் இதை செய்வது முஸ்தஹப் ஆகும்.

40. அறிவிப்பாளர்: அப்துல்லாஹ் இப்னு சைத் அல்மாஸினி, நூல்: புகாரி, எண்: 1120

ஏனெனில், எந்த கப்ரையும் ஸியாரத் செய்கின்ற நோக்கத்தில் தனியாக பயணம் செய்வது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டதல்ல.

அதுமட்டுமல்ல, நபிமார்கள், மற்றும் நல்லோரின் கப்ருகளை தரிசிக்க செல்வதும் மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர மற்ற இடங்களை தரிசிக்க செல்வதும் ஹராம் -தடுக்கப்பட்டது என்பதில் அறிஞர்கள் ஒருமித்த கருத்தில் இருக்கின்றனர். யார் இதை செய்வார்களோ அவர்களின் எண்ணமும் நோக்கமும் பாவமாகும். ஆகவே, இதை செய்பவர்களும் பாவிகள்தான். இந்த செயல் நபி ﷺ அவர்களின் முன்பு கூறப்பட்ட வழிகாட்டுதல்களுக்கு நேரடியாக முரண்பட்ட செயலாகும்.

### நபி ﷺ அவர்களின் கப்ரை ஸியாரத் செய்யும் முறை

நபி ﷺ அவர்களின் கப்ரை ஸியாரத் செய்பவர் அடக்கமாக சென்று நபி ﷺ அவர்களின் கப்ருக்கு முன்னால் நின்று ஒழுக்கத்துடன் தாழ்ந்த குரலில் பின்வருமாறு ஸலாம் கூறவேண்டும்.

اَلسَّلَامُ عَلَيْكَ يَا رَسُولَ اللهِ وَرَحْمَةُ الله وَبَرَكَاتُهُ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்:

عَنْ أَبِي هُرَيْرَةَ ؓ أَنَّ رَسُولَ اللهِ ﷺ قَالَ مَا مِنْ أَحَدٍ يُسَلِّمُ عَلَيَّ إِلَّا رَدَّ اللهُ عَلَيَّ رُوحِي حَتَّى أَرُدَّ عَلَيْهِ السَّلَامَ رواه أبو داود برقم ١٧٤٥

ரஸூலுல்லாஹ் ؓ அவர்கள் கூறினார்கள்: யார் என் மீது ஸலாம் கூறினாலும் அல்லாஹ் எனக்கு எனது உயிரை திருப்பிக் கொடுக்கின்றான். நான் அவருக்கு பதில் ஸலாம் கூறுகின்றேன்.[41]

ஸலாம் கூறிய பின்பு பின்வருகின்ற வாசகங்களை ஒருவர் கூறினால் அதுவும் தவறில்லை.

أَشْهَدُ أَنَّكَ قَدْ بَلَّغْتَ الرِّسَالَةَ وَأَدَّيْتَ الْأَمَانَةَ وَنَصَحْتَ الْأُمَّةَ وَجَاهَدتَّ

41. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ؓ, நூல்: அபூ தாவூத், எண்: 1745

فِي اللّٰهِ حَقَّ جِهَادِهِ. اَللّٰهُمَّ آتِهِ الْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ وَابْعَثْهُ الْـمَقَامَ الْـمَحْمُودَ الَّذِي وَعَدتَّهُ. اَللّٰهُمَّ اجْزِهِ عَنْ أُمَّتِهِ خَيْرَ الْـجَزَاءِ.

நான் சாட்சி கூறுகின்றேன்: நிச்சயமாக நீங்கள் தூதுத்துவத்தை எடுத்துரைத்தீர்கள், அமானிதத்தை ஒப்படைத்தீர்கள்! சமுதாயத்திற்கு நன்மையை நாடினீர்கள். அல்லாஹ்வின் பாதையில் போராடினீர்கள். அல்லாஹ்வே! அவர்களுக்குக்கு வஸீலாவையும் சிறப்பையும் கொடுப்பாயாக! இன்னும், நீ அவர்களுக்கு வாக்களித்த அல்மகாம் அல்மஹ்மூதில் அவர்களை எழுப்புவாயாக! அல்லாஹ்வே! அவர்களின் உம்மத்தின் சார்பாக நீ அவர்களுக்கு சிறந்த கூலியை வழங்குவாயாக!

இதற்கு பிறகு, அபூபக்ர் ﵁ மற்றும் உமர் ﵁ அவர்களுக்கு ஸலாம் கூறவேண்டும். அவர்களுக்காக துஆ கேட்க வேண்டும். அவ்விருவர் மீது அல்லாஹ்வின் அருள் இறங்க பிரார்த்திக்க வேண்டும்.

இப்னு உமர் ﵄ அவர்கள் நபி ﷺ அவர்களுக்கு ஸலாம் கூறும்போதும் நபியவர்களின் இரு தோழர்களுக்கு ஸலாம் கூறும்போதும் இவ்வாறு கூறுவார்கள்:

اَلسَّلَامُ عَلَيْكَ يَا رَسُولَ اللّٰهِ
اَلسَّلَامُ عَلَيْكَ يَا أَبَا بَكْرٍ
اَلسَّلَامُ عَلَيْكَ يَا أَبَتَاهْ

அல்லாஹ்வுடைய தூதரே! உங்கள் மீது ஸலாம் நிலவுக!

அபூபக்ரே! உங்கள் மீது ஸலாம் நிலவுக!

என் தந்தையே! உங்கள் மீது ஸலாம் நிலவுக!

பிறகு, அங்கிருந்து திரும்பி சென்றுவிடுவார்கள்.

மஸ்ஜிது நபவியை ஸியாரத் செய்ய வருபவர் நபி ﷺ அவர்களின் அறையை (-கப்ரை) அல்லது சுவர்களை தொட்டு தடவுவது, தொடுவது, முத்தமிடுவது, அங்கு தவாஃப் செய்வது, துஆ கேட்கும்போது கப்ரை முன்னோக்கி துஆ கேட்பது, நபி ﷺ அவர்களிடம் தனது தேவைகளை கேட்பது, தனது சிரமங்களை, நோய்களை நீக்கும்படி அவர்களிடம் துஆ கேட்பது, ஆகிய இவை எல்லாம் ஹராம் -தடுக்கப்பட்ட செயல்களாகும். ஒரு முஸ்லிம் தனது தேவைகளை அல்லாஹ்விடம்தான் கேட்கவேண்டும். தனது துன்பங்களை நீக்குவதற்கும் அல்லாஹ்விடம்தான் பிரார்த்திக்க வேண்டும். சிறிய பெரிய ஒவ்வொரு தேவைகளையும் அல்லாஹ்விடம்தான் கேட்க வேண்டும்.

நபி ﷺ அவர்களின் கப்ரை அல்லது அபூபக்ர் رضي الله عنه மற்றும் உமர் رضي الله عنه அவர்களின் கப்ருகளை ஸியாரத் செய்வது வாஜிப் -கட்டாயம் இல்லை. இன்னும் இந்த அமல் ஹஜ்ஜுடைய நிபந்தனைகளில் உள்ளதும் இல்லை. பொதுவாக பாமர மக்கள் இந்த அமலை ஹஜ்ஜுடைய அமல்களில் ஒன்றாக அல்லது ஹஜ்ஜுடைய நிபந்தனைகளில் ஒன்றாக கருதுகிறார்கள். இது தவறாகும். மாறாக, சட்டம் என்னவென்றால் யார் மஸ்ஜிது நபவிக்கு வருவாரோ அவர் அங்கு தொழுதுவிட்டு நபி ﷺ அவர்களின் கப்ருகளையும் அபூ பக்ர் رضي الله عنه உமர் رضي الله عنه அவர்களுடைய கப்ருகளையும் ஸியாரத் செய்வது முஸ்தஹப் -விரும்பத்தக்க செயலாகும். இதற்கும் ஹஜ்ஜுக்கும் எவ்வித தொடர்பும் இல்லை.

நபி ﷺ அவர்களுடைய கப்ரை ஸியாரத் செய்ய வரவேண்டும் என்றும் இது ஹஜ்ஜை நிறைவு செய்யக்கூடிய அமல்களில் உள்ளது என்றும் கூறுகின்ற அறிஞர்கள் எடுத்துவைக்கின்ற நபிமொழிகள் பெரும்பாலும் மிக பலவீனமானதும் ஆதாரமாக கருதுவதற்கு தகுதியற்றதும் ஆகும். இன்னும், இவற்றில் அதிகமானவை பொய்யான செய்திகளாகும். நபி ﷺ அவர்களுடைய கப்ரை ஸியாரத் செய்ய வரவேண்டும் என்பதற்கு ஆதாரமாக ஒரு ஸஹீஹான நபிமொழியும் இல்லை.

مَنْ حَجَّ وَلَمْ يَزُرْنِي فَقَدْ جَفَانِي

யார் ஹஜ்ஜு செய்துவிட்டு என்னை ஸியாரத்செய்ய வரவில்லையோ அவர் என்னை வெறுத்துவிட்டார்.

مَنْ زَارَ قَبْرِي وَجَبَتْ لَهُ شَفَاعَتِي

எனது கப்ரை யார் ஸியாரத் செய்ய வருவாரோ அவருக்கு எனது சிபாரிசு கண்டிப்பாக கிடைக்கும்.

மேற்கூறபப்ட்ட அறிவிப்புகளும் இன்னும் இவ்வாறு கூறப்படுகின்ற எல்லா அறிவிப்புகளும் ஆதாரமற்றவை, இட்டுக்கட்டப்பட்டவை, பொய்யானவை என்று அறிஞர்கள் உறுதியாக கூறுகின்றார்கள்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## மதீனாவில் ஸியாரத் செய்ய வேண்டிய இடங்கள்

மதீனாவில் சில இடங்களை ஸியாரத் செய்வதை மார்க்கம் அனுமதித்துள்ளது. அந்த இடங்களில் ஒன்று குபாவில் உள்ள மஸ்ஜிது ஆகும். அங்கு செல்வதும் தொழுவதும் ஆண், பெண் இருவருக்கும் முஸ்தஹப் -விரும்பத்தக்க செயலாகும்.

தான் இருக்கின்ற இடத்திலிருந்து உளூ செய்துவிட்டு அங்கு சென்று ஃபர்ழான அல்லது நஃபிலான தொழுகைகளை தொழுவது முஸ்தஹப் ஆகும். இது நபி ﷺ அவர்களுடைய வழக்கமாக இருந்தது. நபி ﷺ அவர்கள் வாகனத்தில் சென்று அல்லது நடந்து சென்று குபா மஸ்ஜிதில் இரண்டு ரக்அத் தொழுவார்கள்.

عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنهما قَالَ كَانَ النَّبِيُّ ﷺ يَأْتِي مَسْجِدَ قُبَاءٍ رَاكِبًا وَمَاشِيًا فَيُصَلِّي فِيهِ رَكْعَتَيْنِ رواه البخاري برقم ١١١٩

இப்னு உமர் رضي الله عنهما அவர்கள் கூறினார்கள்: வாகனித்தவர்களாக அல்லது

நடந்தவர்களாக நபி ﷺ அவர்கள் குபா மஸ்ஜிதிற்கு வருவார்கள். அதில் இரண்டு ரக்அத் தொழுவார்கள்.[42]

**عَنْ سَهْلِ بْنِ حُنَيْفٍ ﵁ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ تَطَهَّرَ فِي بَيْتِهِ ثُمَّ أَتَى مَسْجِدَ قُبَاءَ فَصَلَّى فِيهِ صَلَاةً كَانَ لَهُ كَأَجْرِ عُمْرَةٍ رواه ابن ماجة برقم ١٤٠٢**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: யார் தனது வீட்டில் உளு செய்து, பிறகு, குபா மஸ்ஜிதிற்கு வந்து, அங்கு ஏதாவது ஒரு தொழுகையை நிறைவேற்றுவாரோ அவருக்கு ஓர் உம்ராவுடைய கூலியைப் போன்று கூலி கிடைக்கும்.[43]

மேலும், மதீனாவில் இருக்கின்ற பகீஃ என்ற பொதுவான மக்பராவையும் உஹுது போரில் ஷஹீதான ஹம்ஸா அவர்களுடைய கப்ரையும் மற்ற தோழர்களின் கப்ருகளையும் ஸியாரத் செய்வது ஆண்களுக்கு மட்டும் முஸ்தஹப் ஆகும். இந்த இரு இடங்களுக்கும் சென்று ஸலாம் சொல்வதும் அவர்களுக்காக துஆ கேட்பதும் சுன்னாவாகும். நபி ﷺ அவர்கள் உஹுது போரில் ஷஹீதான தோழர்களை ஸியாரத் செய்துவிட்டு அவர்களுக்காக துஆ கேட்டார்கள். மேலும் நமக்கு பொதுவான வழிகாட்டுதலை வழங்கியுள்ளார்கள்.

**عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ زُورُوا الْقُبُورَ فَإِنَّهَا تُذَكِّرُكُمْ الْآخِرَةَ رواه ابن ماجة برقم ١٥٥٨**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் கப்ருகளை ஸியாரத் செய்யுங்கள்! நிச்சயமாக அவை உங்களுக்கு மறுமையை நினைவூட்டும்![44]

42. நூல்: புகாரி, எண்: 1119
43. அறிவிப்பாளர்: ஸஹ்ல் இப்னு ஹுனைஃப் ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 1402
44. அறிவிப்பாளர்: அபூ ஹுரைரா ﵁, நூல்: இப்னு மாஜா, எண்: 1558

பொதுவாக கப்ருகளை ஸியாரத் செய்யும்போது நபி ﷺ அவர்கள் பின்வருமாறு ஸலாம் கூறி துஆ கேட்பார்கள்.

اَلسَّلَامُ عَلَيْكُمْ أَهْلَ الدِّيَارِ مِنَ الْمُؤْمِنِينَ وَالْمُسْلِمِينَ وَإِنَّا إِنْ شَاءَ اللّٰهُ لَلَاحِقُونَ أَسْأَلُ اللّٰهَ لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ

இந்த இடங்களில் இருக்கின்ற முஃமின்கள், முஸ்லிம்களே! உங்கள் மீது ஸலாம் உண்டாகட்டும்! நிச்சயமாக நாங்கள் இன் ஷா அல்லாஹ் (உங்களை வந்து) சேருவோம். எங்களுக்காகவும் உங்களுக்காகவும் நான் அல்லாஹ்விடம் ஆஃபியத்தை -பாதுகாப்பை கேட்கின்றேன்![45]

மேற்கூறப்பட்ட இடங்கள்தான் மதீனாவில் ஸியாரத் செய்யப்பட வேண்டியவை ஆகும். இவற்றைத் தவிர இன்று பொதுமக்கள் ஸியாரத் செய்கின்ற இடங்கள் எல்லாம் ஆதாரமற்றவை ஆகும்.

உதாரணமாக, நபி ﷺ அவர்களின் ஒட்டகம் உட்கார்ந்த இடம், மஸ்ஜிதுல் ஜுமுஆ (நபி அவர்கள் முதன் முதலில் ஜுமுஆ தொழுகை நடத்திய இடத்தில் கட்டப்பட்டுள்ள மஸ்ஜிது), பிஃர் காதம் (நபி அவர்களுடைய மோதிரம் காணாமல்போன கிணறு), பிஃர் உஸ்மான் (உஸ்மான் அவர்கள் விலைக்கு வாங்கி முஸ்லிம்களின் பயன்பாட்டிற்காக வக்ஃப் செய்த கிணறு), ஸப்ஃ மஸாஜிது (ஏழு மஸ்ஜிதுகள் - கந்தக் - அகழ் போர் நடந்த இடத்தில் கட்டப்பட்டுள்ள ஏழு மஸ்ஜிதுகள்), மஸ்ஜிதுல் கிப்லதைன் (நபி ﷺ அவர்கள் தொழும் போது கிப்லா மாற்றப்பட்டதால் மஸ்ஜிதுல் அக்ஸாவிலிருந்து கஅபா நோக்கி தங்கள் முகத்தை திருப்பிக் கொண்டார்கள். இந்த சம்பவம் நடைபெற்ற மஸ்ஜிதை மஸ்ஜிது தில் கிப்லதைன் என்று அழைக்கப்படுகின்றது) இந்த இடங்களுக்கு செல்வது சுன்னா அல்ல.

நபி ﷺ அவர்கள் இந்த இடங்களை ஸியாரத் செய்யச் சென்றதும் இல்லை. அங்கு செல்ல வேண்டும் என்று நமக்கு கட்டளையிட்டதும்

45. அறிவிப்பாளர்: புரைதா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 1620

இல்லை. சிறப்பிற்குரிய முன்னோர்கள் இந்த இடங்களை ஸியாரத் செய்ய சென்றதுமில்லை.

மதீனாவில் நபி ﷺ அவர்களின் மஸ்ஜிதைத் தவிர வேறு மஸ்ஜிதுகளுக்கு தனிப்பட்ட சிறப்புகள் ஏதும் இல்லை.

**عَنْ عَائِشَةَ رضي الله عنها قَالَتْ قَالَ رَسُولُ اللهِ ﷺ مَنْ عَمِلَ عَمَلًا لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ رواه أحمد برقم ٢٤٢٩٨**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: நமது கட்டளை இல்லாத ஒரு செயலை யார் செய்வாரோ அது மறுக்கப்பட்டதாகும்.[46]

இந்த ஹதீஸை இமாம் முஸ்லிம் அவர்களும் ஹதீஸ் எண் 3243 ஆக பதிவு செய்துள்ளார்கள். இமாம் புகாரி அவர்கள் ஸனது இல்லாமல் இந்த ஹதீஸை பதிவு செய்துள்ளார்கள்.

ஆகவே, மதீனாவிற்கு வரக்கூடிய முஸ்லிம்கள் மார்க்கம் அனுமதித்த இடங்களை மட்டும் ஸியாரத் செய்ய வேண்டும். அதைத் தவிர்த்து மற்ற இடங்களை ஸியாரத் செய்வதை கண்டிப்பாக தவிர்க்க வேண்டும்.

.............................................

46. அறிவிப்பாளர்: ஆயிஷா رضي الله عنها, நூல்: அஹ்மது, எண்: 24298

ஆறாவது பாடம்

# உழ்ஹிய்யா - அல்லாஹ்விற்காக அறுக்கப்படும் பலிப் பிராணி

இந்த பாடத்தில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன

**முதல் சட்டவிளக்கம்**

## உழ்ஹிய்யா என்றால் என்ன?

உழ்ஹிய்யா என்றால் என்ன? அதன் சட்டம் என்ன? அதற்குரிய ஆதாரங்கள் மற்றும் நிபந்தனைகள் என்ன?

அரபி மொழியில் உழ்ஹிய்யாவின் பொருள் முற்பகலில் பலிப் பிராணியை அறுப்பது என்பதாகும்.

ஷரீஅத்தில் உழ்ஹிய்யா என்றால், ஹஜ்ஜுப் பெருநாள் அன்று அல்லாஹ்வின் பொருத்தம் நாடி அறுக்கப்படக்கூடிய ஆடு அல்லது மாடு அல்லது ஒட்டகம் ஆகும்.

**இதனுடைய சட்டம் மற்றும் ஆதாரம்**

உழ்ஹிய்யா கொடுப்பது சுன்னா முஅக்கதா - மிகவும் வலியுறுத்தப்பட்ட நபிவழியாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

فَصَلِّ لِرَبِّكَ وَانْحَرْ

உமது இறைவனுக்காக தொழுவீராக! அறுத்து பலியிடுவீராக!

(அல்குர்ஆன் 108: 2)

عَنْ أَنَسٍ رضي الله عنه أَنَّ النَّبِيَّ ﷺ كَانَ يُضَحِّي بِكَبْشَيْنِ أَمْلَحَيْنِ رواه أحمد برقم ١٢٣٦٥

நிச்சயமாக நபி ﷺ அவர்கள் இரண்டு வெள்ளை நிறத்துடன் சிறிது கருப்பும் கலந்த ஆடுகளை குர்பானி கொடுப்பவர்களாக இருந்தார்கள்.[47]

**عَنْ أَنَسٍ رضي الله عنه قَالَ ضَحَّى النَّبِيُّ ﷺ بِكَبْشَيْنِ أَمْلَحَيْنِ (أَقْرَنَيْنِ) فَرَأَيْتُهُ وَاضِعًا قَدَمَهُ عَلَى صِفَاحِهِمَا يُسَمِّي وَيُكَبِّرُ فَذَبَحَهُمَا بِيَدِهِ رواه البخاري برقم ٥١٣٢**

நபி ﷺ அவர்கள் வெள்ளை நிறத்துடன் சிறிது கருப்பும் கலந்த (கொம்புகளுடைய) இரண்டு ஆடுகளை குர்பானி கொடுத்தார்கள். தனது பாதத்தை அவற்றின் கன்னங்கள் மீது வைத்தவர்களாக பிஸ்மில்லாஹ் கூறி, தக்பீர் (-அல்லாஹு அக்பர்) கூறி தனது கரத்தால் அவ்விரண்டையும் அறுத்ததை நான் பார்த்தேன் என்று அனஸ் رضي الله عنه அவர்கள் கூறினார்கள்.[48]

### உழ்ஹிய்யா உடைய நிபந்தனைகள்

பின்வருகின்ற நிபந்தனைகள் பூர்த்தியானவர்கள் குர்பானி கொடுப்பது சுன்னாவாகும்.

1). இஸ்லாம் - முஸ்லிமாக இருக்க வேண்டும். ஆகவே, இந்த சட்டம் முஸ்லிம் அல்லாதவருக்கு பொருந்தாது.

2). பருவ வயதை அடைந்தவராகவும் புத்தி சுவாதீனமுள்ளவராகவும் இருக்க வேண்டும். ஆகவே, பருவமடையாத சிறுவர்கள், புத்தி சுவாதீனமில்லாதவர்கள் இந்த சட்டத்தின் கீழ் வரமாட்டார்கள். உழ்ஹிய்யா கொடுப்பது அவர்கள் மீது சுன்னா ஆகாது.

3). வசதி இருக்க வேண்டும். அதாவது, ஹஜ்ஜுப் பெருநாள் மற்றும் தஷ்ரீக்குடைய மூன்று நாள்களில் தன்னுடைய தேவைக்கும் மற்றும்

---

47. அறிவிப்பாளர்: அனஸ் رضي الله عنه, நூல்: அஹ்மது, எண்: 12365

48. நூல்: புகாரி, எண்: 5132

தான் எவர்களுக்கு வாழ்வாதாரம் கொடுப்பது கடமையோ அவர்களுடைய தேவைக்கும் அதிகமாக செல்வம் யாரிடம் இருக்குமோ அவர் உழ்ஹிய்யா கொடுக்க வேண்டும். தேவைக்கு அதிகமான அந்த செல்வத்தை வைத்து உழ்ஹிய்யாவை விலை கொடுத்து வாங்கும் அளவுக்கு அச்செல்வம் இருக்க வேண்டும்.

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## எதை உழ்ஹிய்யா கொடுப்பது கூடும்?

உழ்ஹிய்யா கொடுக்கப்படுகின்ற பிராணி கீழ்காணும் மூன்றில் ஒன்றாக இருக்க வேண்டும்.

1). ஒட்டகம்

2). மாடு

3). ஆடு.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَلِكُلِّ أُمَّةٍ جَعَلْنَا مَنْسَكًا لِيَذْكُرُوا اسْمَ اللّٰهِ عَلَى مَا رَزَقَهُمْ مِنْ بَهِيمَةِ الْأَنْعَامِ

(உங்களுக்கு முன்சென்ற நம்பிக்கை கொண்ட) ஒவ்வொரு சமுதாயத்திற்கும் குர்பானியை அறுப்பதை (வணக்கமாக) நாம் ஆக்கி இருக்கிறோம். அல்லாஹ், அவர்களுக்குக் கொடுத்த கால்நடைகளின் மீது (அவற்றை அறுக்கும்போது) அல்லாஹ்வின் பெயரை அவர்கள் நினைவு கூருவதற்காக (நாம் குர்பானியை ஏற்படுத்தினோம்).

(அல்குர்ஆன் 22:34)

மேற்கூறப்பட்ட வசனத்தில் இடம்பெற்றுள்ள அல்அன்ஆம் என்ற பதம் ஆடு, மாடு, ஒட்டகம் ஆகிய மூன்றை மட்டும்தான் எடுத்துக் கொள்ளும்.

நபி ﷺ அவர்களோ அல்லது தோழர்களோ இவை அல்லாத வேறு

பிராணிகளைக் கொண்டு குர்பானி கொடுத்ததாக ஆதாரம் ஏதும் இல்லை.

ஒரு மனிதர் தனக்கும் தனது குடும்பத்துக்கும் ஒரே ஓர் ஆட்டை குர்பானி கொடுப்பது போதுமாகிவிடும்.

**عَنْ عَطَاءِ بْنِ يَسَارٍ ﵁ قَالَ سَأَلْتُ أَبَا أَيُّوبَ الْأَنْصَارِيَّ ﵁ كَيْفَ كَانَتْ الضَّحَايَا فِيكُمْ عَلَى عَهْدِ رَسُولِ اللّٰهِ ﷺ قَالَ كَانَ الرَّجُلُ فِي عَهْدِ النَّبِيِّ ﷺ يُضَحِّي بِالشَّاةِ عَنْهُ وَعَنْ أَهْلِ بَيْتِهِ فَيَأْكُلُونَ وَيُطْعِمُونَ ثُمَّ تَبَاهَى النَّاسُ فَصَارَ كَمَا تَرَى رواه ابن ماجة برقم ٣١٣٨**

அதா இப்னு யசார் ﵀ கூறுகிறார், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடைய காலத்தில் உழ்ஹிய்யாக்கள் உங்களிடம் எப்படி இருந்தன என்று நான் அபூ அய்யூப் ﵁ அவர்களிடம் கேட்டேன். அவர்கள் கூறினார்கள்: நபி ﷺ அவர்களுடைய காலத்தில் ஒரு மனிதர் தனக்கும் தனது குடும்பத்தார்களுக்கும் ஒரே ஓர் ஆட்டைத்தான் உழ்ஹிய்யா கொடுப்பார். எல்லோரும் சாப்பிடுவார்கள். பிறருக்கும் கொடுப்பார்கள். பிறகு, மக்கள் பெருமைக்காக போட்டி போட ஆரம்பித்து விட்டார்கள். நிலை இப்போது நீ பார்ப்பது போன்று ஆகிவிட்டது.[49]

மாடு, மற்றும் ஒட்டகத்தை ஏழு நபர்கள் சார்பாக உழ்ஹிய்யா கொடுப்பது கூடும்.

**عَنْ جَابِرِ بْنِ عَبْدِ اللّٰهِ ﵁ قَالَ نَحَرْنَا مَعَ رَسُولِ اللّٰهِ ﷺ عَامَ الْحُدَيْبِيَةِ الْبَدَنَةَ عَنْ سَبْعَةٍ وَالْبَقَرَةَ عَنْ سَبْعَةٍ رواه مسلم برقم ٢٣٢٢**

நாங்கள் ஹுதைபிய்யா ஒப்பந்தம் நடந்த ஆண்டில் ரஸூலுல்லாஹ்

49. நூல்: இப்னு மாஜா, எண்: 3138

ﷺ அவர்களுடன் ஒட்டகத்தை ஏழு நபர்கள் சார்பாகவும் மாட்டை ஏழு நபர்கள் சார்பாகவும் குர்பானி கொடுத்தோம்.[50]

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## உழ்ஹிய்யாவின் நிபந்தனைகள்

உழ்ஹிய்யாவில் கவனிக்கப்பட வேண்டிய நிபந்தனைகள்

**1). வயது.**

ஒட்டகம் ஐந்து வயதை பூர்த்தி செய்திருக்க வேண்டும்.

மாடு இரண்டு வயதை பூர்த்தி செய்திருக்க வேண்டும்.

ஆடு ஒரு வயதை பூர்த்தி செய்திருக்க வேண்டும்.

**عَنْ جَابِرٍ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ لَا تَذْبَحُوا إِلَّا مُسِنَّةً إِلَّا أَنْ يَعْسُرَ عَلَيْكُمْ فَتَذْبَحُوا جَذَعَةً مِنْ الضَّأْنِ رواه مسلم برقم ٣٦٣١**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: "முசின்னா[51]"வைத் தவிர வேறு எதையும் குர்பானி கொடுக்காதீர்கள். அது உங்களுக்கு சிரமமாக இருந்தால் மட்டும் நீங்கள் செம்மறி ஆட்டில் ஜத்ஆவை[52] (-ஆறு மாதம் பூர்த்தியானதை) குர்பானி கொடுக்கலாம்.[53]

**عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ الْجُهَنِيِّ رضي الله عنه قَالَ قَسَمَ رَسُولُ اللهِ ﷺ فِينَا ضَحَايَا**

50. அறிவிப்பாளர்: ஜாபிர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 2322

51. முசின்னா என்றால் ஐந்து வயது பூர்த்தியான ஒட்டகம், இரண்டு வயது பூர்த்தியான மாடு, ஒரு வயது பூர்த்தியான நாட்டு ஆடு ஆகும். "முசின்னா" வை **ثنية** "சனிய்யா" என்று அரபியில் கூறப்படும்.

52. செம்மறி ஆடுகள் ஜத்ஆவாக இருக்க வேண்டும். ஜித்ஆ என்பது ஒரு வருடம் பூர்த்தியான ஆடு என்று சிலர் கூறுகிறார்கள். மற்றும் சிலர் ஆறு மாதம் பூர்த்தியான ஆடு என்று கூறுகிறார்கள்.

53. அறிவிப்பாளர்: ஜாபிர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 3631

**فَأَصَابَنِي جَذَعٌ فَقُلْتُ يَا رَسُولَ اللهِ إِنَّهُ أَصَابَنِي جَذَعٌ فَقَالَ ضَحِّ بِهِ رواه مسلم برقم ٣٦٣٤**

உக்பா இப்னு ஆமிர் அல் ஜுஹனி ﵁ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் எங்களுக்கு மத்தியில் உழ்ஹிய்யா பிராணிகளை பங்கு வைத்தார்கள். எனக்கு “ஜதஃ” (-ஆறுமாதம் பூர்த்தியான ஒரு செம்மறி ஆடு) கிடைத்தது. அல்லாஹ்வின் தூதரே, எனக்கு “ஜதஃ” (-ஆறுமாதம் பூர்த்தியான ஒரு செம்மறி ஆடு) கிடைத்தது என்று கூறினேன். நீ அதைக்கொண்டு உழ்ஹிய்யா கொடு என்று நபி ﷺ அவர்கள் எனக்கு கூறினார்கள்.[54]

**عَنْ عُقْبَةَ بْنِ عَامِرٍ ﵁ قَالَ ضَحَّيْنَا مَعَ رَسُولِ اللهِ ﷺ بِجَذَعٍ مِنْ الضَّأْنِ رواه النسائي برقم ٤٣٠٦**

உக்பா இப்னு ஆமிர் ﵁ கூறுகிறார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களுடன் நாங்கள் செம்மறி ஆட்டில் “ஜதஃ” ஐ (-ஆறுமாதம் பூர்த்தியான ஒரு செம்மறி ஆட்டை) உழ்ஹிய்யா கொடுத்தோம்.[55]

**2) குர்பானி கொடுக்கப்படும் பிராணி “சலாமத்” ஆக -நோய் நொடிகளை விட்டும் குறைகளைவிட்டும் நீங்கியதாக இருக்க வேண்டும்.**

மாமிசத்தில் குறையை ஏற்படுத்தக்கூடிய குறைபாடுகளை விட்டும் உழ்ஹிய்யா கொடுக்கப்படுகின்ற ஆடு, மாடு, ஒட்டகம் நீங்கி இருக்க வேண்டும். ஆகவே, மிகவும் மெலிந்த பிராணி, நான்கு கால்களில் ஏதாவது ஒன்றோ அதிகமானதோ நொண்டியாக உள்ள பிராணி, இரண்டு கண்களில் ஒன்று அல்லது இரண்டும் குருடாக இருக்கின்ற பிராணி, நோயுற்று இருக்கின்ற பிராணி ஆகியவற்றை குர்பானியில் அறுப்பது கூடாது.

54. நூல்: முஸ்லிம், எண்: 3634
55. நூல்: நசாயி, எண்: 4306

عَنْ عُبَيْدِ بْنِ فَيْرُوزَ ﷀ قَالَ قُلْتُ لِلْبَرَاءِ بْنِ عَازِبٍ ﷺ حَدِّثْنِي بِمَا كَرِهَ أَوْ نَهَى عَنْهُ رَسُولُ اللّٰهِ ﷺ مِنْ الْأَضَاحِيِّ فَقَالَ قَالَ رَسُولُ اللّٰهِ ﷺ هٰكَذَا بِيَدِهِ أَرْبَعٌ لَا تُجْزِئُ فِي الْأَضَاحِيِّ الْعَوْرَاءُ الْبَيِّنُ عَوَرُهَا وَالْمَرِيضَةُ الْبَيِّنُ مَرَضُهَا وَالْعَرْجَاءُ الْبَيِّنُ ظَلْعُهَا وَالْكَسِيرَةُ الَّتِي لَا تُنْقِي رواه ابن ماجة برقم ٣١٣٥

உபைத் இப்னு ஃபைரூஸ் ﷀ கூறுகிறார், நான் அல்பரா இப்னு ஆஸிப் ﷺ அவர்களிடம், உழ்ஹிய்யாவில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் வெறுத்தவற்றை அல்லது அவர்கள் தடைசெய்தவற்றை எனக்கு அறிவியுங்கள் என்று கூறினேன். அதற்கு அவர்கள் கூறினார்கள், ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் தமது கரத்தால் சாடை செய்து இப்படி கூறினார்கள்: நான்கு வகை பிராணிகளை உழ்ஹிய்யாவில் அறுப்பது கூடாது. அவை,

1. ஒரு கண் குருடாக இருப்பது தெளிவாக உள்ள பிராணி,
2. நோய்வாய்ப்பட்டிருப்பது தெளிவாக தெரிகின்ற பிராணி,
3. கால் நொண்டியாக இருப்பது தெளிவாக தெரிகின்ற பிராணி,
4. உணவு சாப்பிடாமல் மிகவும் மெலிந்து எலும்புகளில் மஜ்ஜை இல்லாத பிராணி.

இவற்றைக்கொண்டு உழ்ஹிய்யாவை நிறைவேற்றுவது கூடாது.[56]

மேற்கூறப்பட்ட நான்கு குறைகளைக் கருத்தில் கொண்டு மேலும் சில குறைகளை இங்கு அறிஞர்கள் கூறுகின்றார்கள். முன்பற்கள் இல்லாத அல்லது பற்கள் உடைந்த பிராணி, காதில் அதிகமான பகுதி அறுபட்ட அல்லது கொம்பு அதிகமான பகுதி உடைந்துவிட்ட பிராணிகளையும் அல்லது இதுபோன்ற குறைகளுடைய பிராணிகளை அறுப்பதை தவிர்ப்பது நல்லதாகும்.

56. நூல்: இப்னு மாஜா, எண்: 3135

**நான்காவது சட்டவிளக்கம்**

## உழ்ஹிய்யாவை அறுக்கவேண்டிய நேரம்

பெருநாள் தொழுகையை நிறைவேற்றுபவர் தொழுத பின்னர் குர்பானி கொடுக்க வேண்டும். பெருநாள் தொழுகையை நிறைவேற்றாதவர்கள் பெருநாள் அன்று சூரியன் உதயமாகி (ஓர் ஈட்டி அளவு உயர்ந்த பின்னர்) இரண்டு ரக்அத்துகளும் குத்பாவும் நிறைவேற்றுகின்ற அளவு நேரம் கடந்துவிட்டால் அவர்கள் உழ்ஹிய்யாவை அறுக்கலாம்.

**عَنْ الْبَرَاءِ بْنِ عَازِبٍ ﵁ قَالَ خَطَبَنَا النَّبِيُّ ﷺ يَوْمَ الْأَضْحَى بَعْدَ الصَّلَاةِ فَقَالَ مَنْ صَلَّى صَلَاتَنَا وَنَسَكَ نُسُكَنَا فَقَدْ أَصَابَ النُّسُكَ وَمَنْ نَسَكَ قَبْلَ الصَّلَاةِ فَإِنَّهُ قَبْلَ الصَّلَاةِ وَلَا نُسُكَ لَهُ رواه البخاري برقم ٩٠٢**

நபி ﷺ அவர்கள் ஈதுல் அழ்ஹா (ஹஜ்ஜு பெருநாள்) அன்று ஈது தொழுகைக்குப் பின்னர் எங்களுக்கு குத்பா பிரசங்கம் நிகழ்த்தினார்கள். அவர்கள் கூறினார்கள், யார் நமது (இந்த) தொழுகையை நிறைவேற்றிவிட்டு நம்முடைய குர்பானிகளை அறுப்பாரோ அவர் கடமையான உழ்ஹிய்யாவை (குர்பானியை) சரியாக நிறைவேற்றியவராக ஆவார். யார் தொழுகைக்கு முன்பாக அறுத்துவிடுவாரோ அது தொழுகைக்கு முன்னர் அறுக்கப்பட்டதாக இருக்கும். அது அவருக்கு உழ்ஹிய்யாவாக சேராது.[57]

**عَنْ جُنْدَبَ بْنِ سُفْيَانَ الْبَجَلِيِّ ﵁ قَالَ شَهِدْتُ النَّبِيَّ ﷺ يَوْمَ النَّحْرِ فَقَالَ مَنْ ذَبَحَ قَبْلَ أَنْ يُصَلِّيَ فَلْيُعِدْ مَكَانَهَا أُخْرَى وَمَنْ لَمْ يَذْبَحْ فَلْيَذْبَحْ رواه البخاري برقم ٥١٣٦**

57. அறிவிப்பாளர்: அல்பரா இப்னு ஆஸிப் ﵁, நூல்: புகாரி, எண்: 902

நான் நபி ﷺ அவர்களுடன் ஈதுல் அழ்ஹா அன்று (தொழுகையில்) கலந்து கொண்டேன். அவர்கள் கூறினார்கள், யார் ஈது தொழுகையை நிறைவேற்றுவதற்கு முன்னர் உழ்ஹிய்யாவை அறுப்பாரோ அவர் அதன் இடத்தில் வேறு ஓர் உழ்ஹிய்யாவை அறுக்கவும். யார் (ஈது தொழுகைக்கு முன்னர்) அருக்கவில்லையோ அவர் (இப்போது தொழுத பின்னர்) அறுக்கவும்.[58]

ஈது தொழுகை முடிந்ததிலிருந்து உழ்ஹிய்யாவின் நேரம் ஆரம்பமாகி தஷ்ரீக் உடைய இறுதி நாள் சூரியன் மறைகின்ற வரை (-பிறை பதிமூன்று மஃரிப் வரை) குர்பானி உடைய நேரம் தொடரும்.

**عَنْ جُبَيْرِ بْنِ مُطْعِمٍ رضي الله عنه عَنْ النَّبِيِّ ﷺ قَالَ وَكُلُّ أَيَّامِ التَّشْرِيقِ ذَبْحٌ رواه أحمد برقم ١٦١٥١**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: தஷ்ரீக் உடைய நாள்கள் (பிறை பதினொன்று, பன்னிரெண்டு, பதிமூன்று ஆகியவை) எல்லாம் உழ்ஹிய்யாவை அறுப்பதற்குரிய நாள்கள்தான்.[59]

மிக ஏற்றமானதும், சிறந்ததும் என்னவென்றால் ஈது தொழுகையை நிறைவேற்றிய பின்னர் உழ்ஹிய்யாவை அறுப்பதாகும்.

**عَنْ الْبَرَاءِ بْنِ عَازِبٍ رضي الله عنه قَالَ قَالَ النَّبِيُّ ﷺ إِنَّ أَوَّلَ مَا نَبْدَأُ فِي يَوْمِنَا هٰذَا أَنْ نُصَلِّيَ ثُمَّ نَرْجِعَ فَنَنْحَرَ فَمَنْ فَعَلَ ذٰلِكَ فَقَدْ أَصَابَ سُنَّتَنَا وَمَنْ نَحَرَ قَبْلَ الصَّلَاةِ فَإِنَّمَا هُوَ لَحْمٌ قَدَّمَهُ لِأَهْلِهِ لَيْسَ مِنْ النُّسْكِ فِي شَيْءٍ رواه البخاري برقم ٩١٢**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நாம் நம்முடைய இந்த நாளில்

58. அறிவிப்பாளர்: ஜுன்துப் இப்னு ஸுஃப்யான் அல்பஜலி رضي الله عنه, நூல்: புகாரி, எண்: 5136.
59. அறிவிப்பாளர்: ஜுபைர் இப்னு முத்யிம் رضي الله عنه, நூல்: அஹ்மது, எண்: 16151

முதலாவதாக ஆரம்பிப்பது ஈது தொழுகையாகும். பிறகு, நாம் திரும்பிச் சென்று நமது உழ்ஹிய்யாவை அறுப்போம். யார் இவ்வாறு செய்வாரோ அவர் நமது சுன்னத்தை சரியாக செய்துவிட்டார். யார் ஈது தொழுகைக்கு முன்பாக அறுத்து விட்டாரோ அதுவெல்லாம் தனது குடும்பத்திற்காக அவர் முன்கூட்டி அறுத்த இறைச்சியாகும். அது எந்த வகையிலும் உழ்ஹிய்யாவாக (-குர்பானியாக) ஆகாது.[60]

**ஐந்தாவது சட்டவிளக்கம்**

## உழ்ஹிய்யாவை என்ன செய்யவேண்டும்? உழ்ஹிய்யா கொடுப்பவர் என்ன செய்ய வேண்டும்?

உழ்ஹிய்யாவை என்ன செய்யவேண்டும்? துல் ஹஜ்ஜுடைய பிறை பிறந்துவிட்டால் உழ்ஹிய்யா கொடுப்பவர் என்ன செய்ய வேண்டும்?

### உழ்ஹிய்யாவை என்ன செய்யவேண்டும்?

உழ்ஹிய்யா கொடுத்தவர் தான் அறுத்த உழ்ஹிய்யாவின் மாமிசத்திலிருந்து உண்பது சுன்னா ஆகும். அவ்வாறே, உறவினர்கள், அண்டை வீட்டார்கள், நண்பர்கள் ஆகியோருக்கு அதிலிருந்து அன்பளிப்பு செய்வதும் சுன்னா ஆகும். மேலும், அதிலிருந்து ஏழைகளுக்கு தர்மம் செய்வது சுன்னா ஆகும்.

فَكُلُوا مِنْهَا وَأَطْعِمُوا الْبَائِسَ الْفَقِيرَ

ஆகவே, அவற்றிலிருந்து புசியுங்கள். வறியவருக்கும் ஏழைக்கும் (அவற்றிலிருந்து) உணவளியுங்கள். (அல்குர்ஆன் 22:28)

மேலும், உழ்ஹிய்யாவின் மாமிசங்களை மூன்றாக பங்கு வைத்து, ஒரு பங்கை தனது குடும்பத்திற்காகவும், ஒரு பங்கை ஏழை அண்டை வீட்டார்களுக்கும், ஒரு பங்கை (யாசித்து வருபவர்களுக்கு) கொடுப்பதும் முஸ்தஹப் -விரும்பத்தக்க செயலாகும்.

60. அறிவிப்பாளர்: அல்பரா இப்னு ஆஸிப், நூல்: புகாரி, எண்: 912

رُوِيَ عَنِ ابْنِ عَبَّاسٍ ﵄ فِي صِفَةِ أُضْحِيَّةِ النَّبِيِّ ﷺ قَالَ يُطْعِمُ أَهْلَ بَيْتِهِ الثُّلُثَ وَيُطْعِمُ فُقَرَاءَ جِيرَانِهِ الثُّلُثَ وَيَتَصَدَّقُ عَلَى السُّؤَّالِ بِالثُّلُثِ. رَوَاهُ الْحَافِظُ أَبُو مُوسَى الْأَصْفَهَانِيُّ فِي الْوَظَائِفِ وَقَالَ حَدِيثٌ حَسَنٌ

نقلا عن المغني لابن قدامة رحمه الله

நபி ﷺ அவர்கள் தமது உழ்ஹிய்யாவை எப்படி பங்கு வைப்பார்கள் என்று இப்னு அப்பாஸ் ﵄ கூறுகிறார்கள்: உழ்ஹிய்யாவில் மூன்றில் ஒன்றை தமது குடும்பத்தார்களுக்கு உண்ண கொடுப்பார்கள். மூன்றில் ஒன்றை தமது ஏழையான அண்டை வீட்டார்களுக்கு உண்ண கொடுப்பார்கள். யாசிப்பவர்களுக்கு மூன்றில் ஒன்றை தர்மம் செய்வார்கள்.[61]

**ஈதுடைய நாள்கள் (பிறை 10, 11, 12, 13) முடிந்த பின்னரும் உழ்ஹிய்யாவின் மாமிசத்தை சேமித்து வைப்பது கூடும்.**

عَنْ بُرَيْدَةَ ﵁ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ نَهَيْتُكُمْ عَنْ زِيَارَةِ الْقُبُورِ فَزُورُوهَا وَنَهَيْتُكُمْ عَنْ لُحُومِ الْأَضَاحِيِّ فَوْقَ ثَلَاثٍ فَأَمْسِكُوا مَا بَدَا لَكُمْ رواه مسلم برقم ١٦٢٣

கப்ருகளை ஸியாரத் செய்ய வேண்டாம் என்று நான் உங்களை தடுத்தேன். (இப்போது அந்த தடை நீங்கிவிட்டது.) ஆகவே, நீங்கள் அவற்றை ஸியாரத் செய்யலாம்! உழ்ஹிய்யா உடைய மாமிசங்களை மூன்று நாட்களுக்கு அதிகமாக சேமிக்க கூடாது என்று நான் உங்களை தடுத்தேன். இப்போது நீங்கள் உங்களுக்கு வேண்டிய அளவு (சேமித்து) வைக்கலாம்![62]

61. அறிவிப்பாளர்: இப்னு அப்பாஸ் ﵄, நூல்: அல்முக்னி, ஆசிரியர்: இப்னு குதாமா.
62. அறிவிப்பாளர்: புரைதா ﵁, நூல்: முஸ்லிம், எண்: 1623

துல் ஹஜ்ஜுடைய பிறை பிறந்துவிட்டால் உழ்ஹிய்யா கொடுப்பவர் என்ன செய்ய வேண்டும்?

துல் ஹஜ்ஜுடைய பிறை பிறந்துவிட்டால் உழ்ஹிய்யா கொடுப்பவர் தனது முடிகளையோ, நகங்களையோ வெட்டக்கூடாது. இது இவர் மீது ஹராம் ஆகும். உழ்ஹிய்யா கொடுத்து முடிகின்றவரை அவர் முடிவெட்டுவதையும் நகம் வெட்டுவதையும் தவிர்க்க வேண்டும்.

**عَنْ أُمِّ سَلَمَةَ رضي الله عنها تَرْفَعُهُ قَالَ إِذَا دَخَلَ الْعَشْرُ وَعِنْدَهُ أُضْحِيَّةٌ يُرِيدُ أَنْ يُضَحِّيَ فَلَا يَأْخُذَنَّ شَعْرًا وَلَا يَقْلِمَنَّ ظُفُرًا رواه مسلم برقم ٣٦٥٤**

நபி ﷺ அவர்கள் கூறியதாக உம்மு ஸலமா رضي الله عنها அவர்கள் அறிவிக்கின்றார்கள்: துல் ஹஜ்ஜு பிறை பிறந்துவிட்டால் யார் உழ்ஹிய்யா கொடுப்பதற்காக தன்னிடம் உழ்ஹிய்யாவை வைத்து இருக்கின்றாரோ அவர் முடியை எடுக்க வேண்டாம், நகத்தை வெட்ட வேண்டாம்.[63]

**عَنْ أُمِّ سَلَمَةَ رضي الله عنها أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ إِذَا دَخَلَتْ الْعَشْرُ وَأَرَادَ أَحَدُكُمْ أَنْ يُضَحِّيَ فَلَا يَمَسَّ مِنْ شَعَرِهِ وَبَشَرِهِ شَيْئًا رواه مسلم برقم ٣٦٥٣**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: துல் ஹஜ்ஜுடைய பிறை பிறந்து விட்டால், உங்களில் ஒருவர் உழ்ஹிய்யா கொடுக்க நாடினால் அவர் தனது (தலை) முடியையோ உடல் முடியையோ (நகத்தையோ) வெட்ட வேண்டாம்.[64]

---------------

63. நூல்: முஸ்லிம், எண்: 3654

64. அறிவிப்பாளர்: உம்மு சலமா رضي الله عنها, நூல்: முஸ்லிம், எண்: 3653

*ஏழாவது பாடம்*

# அகீக்கா

அகீக்கா - மகப்பேறு குர்பானி

இதில் பல சட்டவிளக்கங்கள் உள்ளன

**முதலாவது சட்டவிளக்கம்**

## அகீக்கா என்றால் என்ன? மற்றும் அதன் சட்டம், நேரம்

அகீக்கா என்றால் என்ன? அதன் சட்டம் என்ன? அதன் நேரம் எது?

**அகீக்கா என்றால் என்ன?**

அகீக்கா என்ற பதம் அக் என்ற வேர் சொல்லிலிருந்து வந்ததாகும். அக் என்றால் வெட்டுதல் என்று பொருளாகும். குழந்தை பிறந்தவுடன் அதன் தலையில் இருக்கின்ற முடிக்கு அரபியில் அகீக்கா என்று கூறப்படும்.

மார்க்கத்தில் அகீக்கா என்றால் குழந்தை பிறந்த ஏழாவது நாளன்று அதன் தலை முடிகளை சிரைத்து குழந்தைக்காக அறுக்கப்படுகின்ற பிராணிக்கு கூறப்படும்.

இது தந்தை தனது பிள்ளைக்கு செய்யவேண்டிய கடமைகளில் ஒன்றாகும்.

**அகீக்கா உடைய சட்டம்:**

அகீக்கா கொடுப்பது மிகவும் வலியுறுத்தப்பட்ட நபிவழி - சுன்னா முஅக்கதா ஆகும்.

**عَنْ سَلْمَانَ بْنِ عَامِرٍ الضَّبِّيِّ ﷺ قَالَ سَمِعْتُ رَسُولَ اللهِ ﷺ يَقُولُ مَعَ الْغُلَامِ عَقِيقَةٌ فَأَهْرِيقُوا عَنْهُ دَمًا وَأَمِيطُوا عَنْهُ الْأَذَى رواه البخاري برقم ٥٠٤٩**

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூற நான் செவியுற்றேன்: குழந்தையுடன் அகீக்கா கொடுக்கப்பட வேண்டும். ஆகவே, குழந்தையின் சார்பாக ஒரு குர்பானி கொடுங்கள்! அதைவிட்டும் அதற்கு தொந்தரவு தரக்கூடியதை நீக்கிவிடுங்கள்![65]

**عَنْ سَمُرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ الْغُلَامُ مُرْتَهَنٌ بِعَقِيقَتِهِ يُذْبَحُ عَنْهُ يَوْمَ السَّابِعِ وَيُسَمَّى وَيُحْلَقُ رَأْسُهُ رواه الترمذي برقم ١٤٤٢**

குழந்தை அதன் அகீக்காவுடன் பாதுகாக்கப்படுகின்றது. குழந்தையின் சார்பாக ஏழாவது நாள் அன்று அது அறுக்கப்படும்; (அன்று) அதற்கு பெயர் வைக்கப்படும்; அதன் தலை (முடி) சிரைக்கப்படும்.[66]

**இரண்டாவது சட்டவிளக்கம்**

## அகீக்காவில் அறுக்கப்படவேண்டிய பிராணியின் எண்ணிக்கை

ஆண் குழந்தையாக இருந்தால் இரண்டு ஆடுகளும், பெண் குழந்தையாக இருந்தால் ஓர் ஆடும் அகீக்காவில் அறுக்க வேண்டும்.

**عَنْ أُمِّ كُرْزٍ ﷺ قَالَتْ سَمِعْتُ النَّبِيَّ ﷺ يَقُولُ عَنْ الْغُلَامِ شَاتَانِ مُتَكَافِئَتَانِ وَعَنْ الْجَارِيَةِ شَاةٌ رواه ابن ماجة برقم ٣١٥٣**

நபி ﷺ அவர்கள் கூற நான் செவியுற்றேன்: ஆண் குழந்தை

65. அறிவிப்பாளர்: சல்மான் இப்னு ஆமிர் ﷺ, நூல்: புகாரி, எண்: 5049
66. அறிவிப்பாளர்: சமுரா ﷺ, நூல்: திர்மிதி, எண்: 1442

சார்பாக வயதிலும் தோற்றத்திலும் ஒப்பான இரண்டு ஆடுகள் (உடனுக்குடன்) அறுக்கப்பட வேண்டும். பெண் குழந்தை சார்பாக ஓர் ஆடு அறுக்கப்பட வேண்டும்.[67]

**மூன்றாவது சட்டவிளக்கம்**

## அகீக்காவின் செயல் முறைகள்

குழந்தைக்கு பெயர்சூட்டுவது, தலையை சிரைப்பது, இனிப்பூட்டுவது, அதன் காதில் அதான் கூறுவது

### 1). குழந்தைக்கு பெயர் சூட்டுவது

குழந்தை பிறந்த ஏழாவது நாளில் பெயர்சூட்டுவது சுன்னா ஆகும்.

**عَنْ سَمُرَةَ ﷺ قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ الْغُلَامُ مُرْتَهَنٌ بِعَقِيقَتِهِ يُذْبَحُ عَنْهُ يَوْمَ السَّابِعِ وَيُسَمَّى وَيُحْلَقُ رَأْسُهُ رواه الترمذي برقم ١٤٤٢**

குழந்தை அதன் அகீக்காவுடன் பாதுகாக்கப்படுகின்றது. குழந்தையின் சார்பாக ஏழாவது நாளன்று அது அறுக்கப்படும்; (அன்று) அதற்கு பெயர் வைக்கப்படும்; அதன் தலை (முடி) சிரைக்கப்படும்.[68]

மேலும் குழைந்தைக்கு அழகிய பெயரை தேர்வு செய்வது சுன்னா ஆகும். அருவருப்பாக இருந்த பல பெயர்களை நபி ﷺ அவர்கள் மாற்றி இருக்கின்றார்கள். தவறான பொருள் உள்ள, அல்லது அருவருப்பான பொருள் உள்ள பெயர்களை மாற்றி வேறு அழகிய பெயர்களை வைக்குமாறு நபி ﷺ அவர்கள் கட்டளை இட்டுள்ளார்கள்.

பெயர்களில் மிக அழகியது அப்துல்லாஹ், அப்துர் ரஹ்மான் ஆகும்.

67. அறிவிப்பாளர்: உம்மு குர்ஸ் ؓ, நூல்: இப்னு மாஜா, எண்: 3153
68. அறிவிப்பாளர்: சமுரா ؓ, நூல்: திர்மிதி, எண்: 1442

عَنِ ابْنِ عُمَرَ رضي الله عنه قَالَ قَالَ رَسُولُ اللهِ ﷺ إِنَّ أَحَبَّ أَسْمَائِكُمْ إِلَى اللهِ عَبْدُ اللهِ وَعَبْدُ الرَّحْمٰنِ رواه مسلم برقم ٣٩٧٥

ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்கள் பெயர்களில் அல்லாஹ்விற்கு மிகவும் விருப்பமான பெயர் அப்துல்லாஹ், அப்துர் ரஹ்மான் ஆகும்.[69]

### 2). குழந்தையின் தலையை சிரைப்பது

ஆண் குழந்தையாக இருந்தாலும் அல்லது பெண் குழந்தையாக இருந்தாலும் ஏழாவது நாளன்று அகீக்கா கொடுத்த பின்னர் தலைமுடியை முற்றிலும் சிரைப்பது சுன்னா ஆகும். பிறகு, அதன் எடை அளவு வெள்ளியை தர்மம் செய்ய வேண்டும்.

عَنْ عَلِيِّ بْنِ أَبِي طَالِبٍ رضي الله عنه قَالَ عَقَّ رَسُولُ اللهِ ﷺ عَنْ الْحَسَنِ بِشَاةٍ وَقَالَ يَا فَاطِمَةُ احْلِقِي رَأْسَهُ وَتَصَدَّقِي بِزِنَةِ شَعْرِهِ فِضَّةً قَالَ فَوَزَنَتْهُ فَكَانَ وَزْنُهُ دِرْهَمًا أَوْ بَعْضَ دِرْهَمٍ رواه الترمذي برقم ١٤٣٩

அலி رضي الله عنه அவர்கள் கூறினார்கள்: ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் ஹஸன் (பிறந்தபோது) அவர்கள் சார்பாக ஓர் ஆடு அகீக்கா கொடுத்தார்கள். மேலும், கூறினார்கள், ஃபாத்திமா! அவருடைய தலையை சிரைப்பாயாக! அவருடைய முடியின் எடை அளவு வெள்ளியை தர்மம் செய்வாயாக! அலி رضي الله عنه அவர்கள் கூறுகிறார்கள், அதை ஃபாத்திமா அவர்கள் நிறுத்துப் பார்த்தார்கள். அது ஒரு திர்ஹம் அல்லது அதற்கு கொஞ்சம் குறைவாக இருந்தது.[70]

### 3). குழந்தைக்கு இனிப்பூட்டுவது

குழந்தைக்கு அது ஆணாக இருந்தாலும் சரி, அல்லது பெண்ணாக

69. அறிவிப்பாளர்: இப்னு உமர் رضي الله عنه, நூல்: முஸ்லிம், எண்: 3975
70. அறிவிப்பாளர்: அலி இப்னு அபீ தாலிப் رضي الله عنه, நூல்: திர்மிதி, எண்: 1439

இருந்தாலும் சரி இனிப்பூட்டுவது சுன்னா ஆகும். அதாவது பேரீத்தம் பழம் அல்லது தேன் போன்ற இனிப்பான ஒன்றை அதன் வாயில் ஊட்ட வேண்டும். இதை தஹ்னீக் என்று கூறப்படும்.

அதாவது, பேரீத்தம் பழத்தை நமது வாயில் மென்றுவிட்டு பிறகு, அதை குழந்தையின் வாயில் வைத்து அதன் தாடையை அசைக்க வேண்டும். அதன் மூலம் அந்த பேரீத்தம் பழத்தின் கொஞ்சம் இனிப்பு அதன் வயிற்றுக்குள் இறங்கும்.

**عَنْ أَبِي مُوسَى ﵁ قَالَ وُلِدَ لِي غُلَامٌ فَأَتَيْتُ بِهِ النَّبِيَّ ﷺ فَسَمَّاهُ إِبْرَاهِيمَ فَحَنَّكَهُ بِتَمْرَةٍ وَدَعَا لَهُ بِالْبَرَكَةِ وَدَفَعَهُ إِلَيَّ وَكَانَ أَكْبَرَ وَلَدِ أَبِي مُوسَى رواه البخاري برقم ٥٠٤٥**

அபூ மூஸா ﵁ அவர்கள் கூறுகிறார்கள்: எனக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. நான் அந்த குழந்தையை நபி ﷺ அவர்களிடம் கொண்டு வந்தேன். நபி ﷺ அவர்கள் அதற்கு இப்ராஹீம் என்று பெயர் வைத்தார்கள். பிறகு, பேரீத்தம் பழத்தைக் கொண்டு அதற்கு தஹ்னீக் - இனிப்பூட்டினார்கள். இன்னும், அதற்கு பரகத்திற்காக துஆ கேட்டார்கள். பிறகு, அதை என்னிடம் கொடுத்தார்கள். இவர் அபூ மூஸாவின் ﵁ மூத்த மகனாக இருந்தார்.[71]

**عَنْ عَائِشَةَ أَنَّ رَسُولَ اللهِ ﷺ كَانَ يُؤْتَى بِالصِّبْيَانِ فَيُبَرِّكُ عَلَيْهِمْ وَيُحَنِّكُهُمْ رواه مسلم برقم ٤٠٠٠**

நிச்சயமாக ரஸூலுல்லாஹ் ﷺ அவர்களிடம் குழந்தைகளைக் கொண்டு வரப்படும். அந்தக் குழந்தைகளுக்காக நபி ﷺ அவர்கள் பரகத் வேண்டி (பாரகல்லாஹு அலைஹி என்று) துஆ கேட்பார்கள். இன்னும் அவர்களுக்கு தஹ்னீக் - இனிப்பூட்டுவார்கள்.[72]

71. நூல்: புகாரி, எண்: 5045

72. அறிவிப்பாளர்: ஆயிஷா, நூல்: முஸ்லிம், எண்: 4000

**4). குழந்தையின் காதில் அதான் கூற வேண்டும்.**

குழந்தை பிறந்தவுடன் அதன் காதில் அதான் கூறுவது சுன்னா ஆகும். சிலர் கூறுகின்றனர்: “வலது காதில் அதானும் இடது காதில் இகாமாத்தும் கூறவேண்டும்.”

**عَنْ أَبِي رَافِعٍ ﷺ قَالَ رَأَيْتُ رَسُولَ اللهِ ﷺ أَذَّنَ فِي أُذُنِ الْحَسَنِ بْنِ عَلِيٍّ حِينَ وَلَدَتْهُ فَاطِمَةُ ﷺ بِالصَّلَاةِ رواه أبو داود برقم ٤٤٤١**

அபூ ராஃபிஃ ﷺ கூறுகிறார்: ஹசன் இப்னு அலி ﷺ அவர்களை ஃபாத்திமா ﷺ அவர்கள் பெற்றெடுத்தபோது அவரின் காதில் ரஸூலுல்லாஹ் ﷺ அவர்கள் அவர்கள் அதான் கூறியதை நான் பார்த்தேன்.[73]

........................................

73. நூல்: அபூ தாவூத், எண்: 4441